NO: 7897

# ஜாவா யாத்திரை

(கடிதங்கள்)

ரவீந்திரநாத் டாகூர்

Presented by. M. Alagappan IV.A
to Mr. Letchumanan Chethiar on the
occasion of his marriage. 7.2.54.

தமிழாக்கம்

த. நா. குமாரஸ்வாமி, பி. ஏ.






அல்லயன்ஸ் கம்பெனி
தபால் பெட்டி நெ. 617,
மயிலாப்பூர் :: சென்னை-4

பதிப்புரிமை] 1951 [விலை ரூ. 2-0-0

முதற் பதிப்பு
ஆகஸ்ட் 1951

சிறுகதைத் தொகுதிகள்

கன்யா குமாரி
குழந்தை மனம்
சக்தி வேல்
தேவகி
மோகினி
பிள்ளைவரம்
போகும் வழியில்
வஸந்தா
கதைக் கொடி
அன்னபூரணி
கதைக் கோவை—3
கதைக் கோவை—4



நாவல்கள்

ராஜகுமாரி விபா
சந்திரிகா
இல்லொளி
மனைவி
உடைந்த வளையல்
ஸ்ரீகண்டனின் புனஜன்மம்
தீனதயாளு
மிருணாளினி
இந்திரா
தேவதாஸ்
ஸெளதர்மினி
லலிதா

அல்லயன்ஸ் பிரஸ்
சென்னை . 4

# நூன்முகம்

ஜாவா, பலித்தீவுகளில் எஞ்சி நிற்கும் பழமையான இந்து நாகரிகத்தையும் கலைப்பண்பையும் நேரில் கண்டு நுகரவேண்டுமென்பது கவியரசரின் நீண்டநாள் ஆவல். 1927-இல் 'ஜாவா கழக'த்தின் சார்பாக அவருக்கு அழைப்பு வந்தது. டச்சு சர்க்காரும் எல்லாவிதப் பயணச்சௌகரியங்களையும் கவிக்குச் செய்துதருவதாக உறுதி கூறினர். அவர் செய்த வெளிநாட்டு யாத்திரைகளில் இது ஒன்பதாவது ஆகும். கல்கத்தா சர்வகலாசாலைப்பேராசிரியர் டாக்டர் சுநீதிகுமார சட்டர்ஜீ, ஸ்ரீ சுரேந்திரநாத்கர் தீரேந்திரநாத் தேவவர்மன் போன்ற ஓவியர்களும் இந்த யாத்திரைக் குழுவைச் சேர்ந்தவர்கள். ஒவ்வொருவரும் தம் தம் துறைகளில் புகழ் எய்தியவர். 1927-ஆம் வருஷம் ஜூலை மாதம் 12-ஆம் தேதி டாகுர் சென்னைக்குப் புறப்பட்டு அங்கிருந்தே மலேயாவுக்குக் கப்பல் ஏறினர். சிங்கப்பூரில் அவருக்கு அமோகமான வரவேற்பு. ஆகஸ்ட் 17-ஆம் தேதி சுமத்திராவின் பேலோவான் துறையில் கவி பயணமாகும் கப்பல் ஒதுங்கியது. அங்கே டச்சுச் சங்கீத மேதையான பாகே என்பவரும் அவருடைய பத்தினியும் கவியுடன் சேர்ந்து கொண்டனர். படாவியாவை அடைந்ததும் உலாந்தா சர்க்கார் ஓர் அரசனுக்குச் செய்வது போன்ற மரியாதைகளைச் செய்து இவரை உபசரித்தனர். அப்புறம் பலித்தீவுக்குப் புறப்பட்டார். வழித்துணையாக வந்த ஸாமுவேல் கோபேர்பர்க் என்பவர் கவிக்கு எவ்வளவோ தொண்டாற்றினர். இவர் சுரபாயாவில் அரசர் மங்குநகரோவின் விருந்தினராக இருந்தது முதலிய விவரங்களை உள்ளே காணலாம்.

திருவலிதாயம்
22 - 8 - 51

ஆக்கியோன்
தண்டலம் நா. குமாரசாமி

M. Alagappan. IV form 'A'
7.2.54

# ஜாவா யாத்திரை

(கடிதங்கள்)

## 1

யாத்திரைக்குப் புறப்பட்டாயிற்று. வானத்தை மூடிக்கொண்டிருந்த மேகத்திரையும் விலகிவிட்டது. சூரியன் இன்முகத்துடன் எனக்கு வழியனுப்பினான். கல்கத்தாவிலிருந்து சென்னைவரை இரயில் வண்டிச் சாளரத்தின் மூலம் கண்ணுக்கு எட்டிய தூரம் எங்கே பார்த்தாலும் பயிர்களின் பசுமைவெள்ளம் பெருகி ஓடியது. இளம் பயிர்கள்மீது காற்றின் அலைகள் மோதும் காட்சி, வேய்ங்குழலில் படிப் படியாக எழும் தான வரிசைகளை ஒத்திருந்தது. வயல்கள்தோறும் இளங் கதிர் எடுத்திருந்தது. காடு காவுகளில் மரங்களின் தளிர்கள் கொழுவிய பைங்கிற வனப்புடன் விளங்கின. புல் தளிர் மேனி இராமபிரானின் திருவடித் தூசு பட்டவுடன் நில மடந்தையின் மடியிலிருந்து அகலிகை விழித்துக் கொண்டுவிட்டாள்!

இயற்கையின் இப் புத்துயிர் விழவில் தென்படும் இனிய காட்சிகளுக்கு எதிரொலியாக இன்சுவைப் பாட்டுக்களைப் பாடத்தானே நான் இவ்வுலகில் தோன்றியுள்ளேன் என்ற நினைவு அடிக்கடி வந்தது. செயலில் கருத்துள்ளவர்கள், இந்தக் கவிதை உணர்ச்சியெல்லாம் வீண் பகட்டு என்பார்கள். அதாவது, எங்களைப்போன்றவர்கள் கருமமே பெரிதான இல்லறத்திற்குத் துளியும் பயன்படாதவர்கள் என்று அதற்குப் பொருள். எங்கள் வாழ்வு பயனற்ற வாழ்வுதான். அதில் வெட்கமென்ன? பயனற்ற வாழ்வின் மூலம் எங்கள் ஆன்மாவை அறிந்து இன்புறுகிறோம்.

செட்டான பேர்வழிகள் ஒரு விஷயத்தை மட்டும் அடிக்கடி மறந்து விடுகிறார்கள்: அவசியத்திற்கு ஏற்ற பயன் கைகூட வேண்டுமானால் அளவுக்கு மீறிய முயற்சி வேண்டுமென்பதைத்தான். இந்த உண்மையை மாரிக் காலத்துப் பயிர் நிலங்கள் எடுத்துக் காட்டுகின்றன. நமக்கு வேண்டியதென்ன? வயிற்றுக்குப் போதுமான உணவு. இந்தச் சிறு விருப்பம் தானியக் கதிராக நம் எதிரில் உருவெடுத்து வரும்பொழுது, மழை செதும்பப் பெய்த மண்ணகத்தின் இனிய பசுமை நம்முடைய அந்த உணவு விருப்பத்தையும் அடக்கி விடுகிறது. கைப்பிடி பிச்சைகூடக் கிடைக்காதபோது செல்வத்தின் கஞ்சத்தனம் பிடி பிச்சைக்குமேல் வழங்க மறுத்துவிடுகிறது. உயிரும் உள்ளமும் மூலப்பொருளாக வைத்து நடத்தும் எங்களது வியாபாரத்தின் கருத்து, மீண்டும் உயிர் பெறுவதே யாகும். இது வீண் என்று பிறருக்குத் தோற்றலாம். நம்மில் துறவு மனப்பான்மை உடையவர்கள் இந்த வீண் போக்கை இகழ்கிறார்கள். ஆனால் இதில் தானே இருக்கிறது கவிகளின் கொண்டாட்டம்! செலவுக்கு மீறிய கையிருப்பைக் கடைசிக் காசுவரை விரயம் செய்யும் துணிவு எங்களுக்குத்தான் உண்டு. இந்த அதிகச்செலவு

போகத்தை விரும்பிச் செய்வது அன்று; துணிவான செயலில் உலவும் ஆனந்தத்தை நுகர்வதற்கே. மனிதனுக்கு நெஞ்சு உரம் வளர வளர அவன் மனிதப்பிறவி எடுத்ததன் பயனை அடைகிருன்.

இந்தக் காலத்தில் ஐரோப்பாவில் மனிதன் பல துறைகளில் உயிரும் உணர்வும் பெற்று மகிழ்கிருன். இதன் பொருட்டே உலகெங்கும் அவன் ஆடம்பரமாக அறிவு ஒளி பரவச்செய்து வருகிருன். அவ்வொளிபட்டு நாற்றிசையும் பளிச்செனத் திகழ்கின்றன. துளி எண்ணெய்விட்டு ஏற்றிய அகல் விளக்கு, சற்றே ஒளிதருமே தவிர அந்த மங்கலில் மனிதனுடைய முழு உருவமும் தென்படாது. இவ்வாறு தெளிவற்று இருப்பது படைப்பின் உலோபித்தனம் என்றே சொல்லவேண்டும். முன்னுக்கு வராமல் தயங்குவது மானிட தருமத்தின் அழிவையே சுட்டும். உயிர் வகையில் மனிதன் ஒளிபடைத்த இனத்தைச் சேர்ந்தவன். மற்ற ஜந்துக்கள் தின்று உயிர் வாழ்கின்றனவே தவிர அவற்றின் இயல்பில் சற்றேனும் அறிவு ஒளி தீண்டவேயில்லை. மனிதன் தன் உயிரைப் பத்திரமாகக் காப்பதுமட்டுமன்றி, அதன் உயர்வை வெளியே காட்டுகிருன். வெளிப்படையாக ஆக்குவதற்கு உயிர் ஒளி பெற வேண்டும். அளவற்ற வாழ்விலிருந்தே- உயிர்ச் செல்வத்திலிருந்தே- இந்த ஒளி தோன்றும். இந்த யுகத்தில் ஐரோப்பாவிலே தான் எத்திசையும் இவ்வொளியின் கிரணங்கள் பரந்திருக்கின்றன. அங்கே மனிதன் வெறும் வயிற்றுப் பிழைப்போடு நில்லாமல் மேற்கொண்டு அநேக முயற்சிகளில் ஈடுபடுகிருன். உயிரைக் காப்பது ஓர் அளவுக்கு உட்பட்டது; உயிரை வெளிக் காட்டுவதற்கு அளவே இல்லை. ஐரோப்பாவில் வாழ்வானது அளவுக்கு மீறியதோர் உண்மை அநுபவம்.

இதனல் என் மனத்துள் இடிந்து போகவில்லை ஏனெனில், இந் நாட்டில், இந்தக் காலத்தில் மனிதன்

அவ்வறிவினுற் பயனடையாது போனுலும் பின்னுல் அது பயன்படுமென்று உணர்ந்தே தீருவான். இன்று ஐரோப்பா வழிந்து ஓடும் உயிரின் வன்மையினுல் உலகின் உள்ளத்தைத் தொடுகிறது. உறங்கிவிழும் மனிதனைத் தட்டி எழுப்புகிறது. அது தரும் செல்வம் அளவிடற்கரியது.

எல்லா நாடுகளுக்கும், எல்லாக் காலத்திற்கும் ஐரோப்பா அளிக்கும் செல்வம் எந்த அழியா உண்மையின்மேல் நிற்கிறது? அதன் விஞ்ஞானமே அந்த உண்மை. மனிதனது அறிவு, உலகத்தைத் தன் ஆட்சிக்குள் அடக்கிப் பல தொழில்களில் வெற்றி பெற்று வருகிறது. என்ன பரந்த வன்மை அதற்கு! அது விரும்பும் பொருள்களுக்கு முடிவில்லை; தரும் பொருள்களுக்கும் ஓர் அளவில்லை. சென்ற ஆண்டு ஐரோப்பாவிலிருந்து திரும்பி வரும்பொழுது ஜெர்மன் இளைஞன் ஒருவனுடன் பேசும் வாய்ப்புக் கிட்டியது. இளவயதுள்ள தன் மனைவியுடன் அவன் பாரத நாட்டுக்கு வந்துகொண் டிருந்தான். பாரத நாட்டின் காட்டுப் பிரதேசம் எங்கும் சுற்றிப் பார்த்து அவ்விடங்களில் மறைந்து வாழும் மக்களின் நடுவே இரண்டு ஆண்டுகளாவது இருந்து பழகி அவர்களது வாழ்க்கை முறைகளை ஆராயும் நோக்கத்துடன் வருவதாகச் சொன்னுன். இந்த நோக்கத்தை நிறைவேற்ற அவ்விருவரும் பாடுபடச் சற்றும் தயங்கவில்லை. மனிதனைப்பற்றி மனிதன் அறிந்து கொள்ளவேண்டிய விஷயம் எவ்வளவோ இருக்கிறது. காட்டு மனிதர்கள் வாழும் இடத்தின் எல்லையை மிதிப்பதோடு இந்த ஆராய்ச்சி நின்றுவிடாது. தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களைத் தொடர்ச்சியாக ஆராய்தல், வகுத்து வகுத்துத் திரட்டுதல் இவை போன்ற வழிகளில் மனத்துள் படிந்த மயக்கம் நீங்கி அறிவுப்பயிற்சியில் மனிதன் தேர்ச்சி பெறுகிருன். ஐரோப்பாவில் மனிதர் இவ்வாறெல்லாம் உயரிய நிலைக்கு வருவதைப் பார்க்கிருேம். இந்த வன்மையைக்கொண்டே

இம்மலர்தலை உலகு ஐரோப்பியனுடைய உலகாக மாறி விடுகிறது. மனிதனுக்கு இடராக நிற்பதை அகற்ற உபயோகிக்கும் ஒரு சக்தியை நம் கண்முன்னே ஓர் உருவாகப் பார்க்க முடியுமாயின், அதன் பரந்த உருவம நம்மைத் திகைக்கச் செய்யும்.

ஒரு விஷயத்தில் ஐரோப்பா காட்டும் ஒளி பெரிதானாலும், உலகத்தவரே பெருமைப்படக் கூடியதாக இருந்தாலும், அதற்கு இருண்ட பக்கமும் உண்டு. உபநிடதத்தில், "முயற்சியிலே வெற்றியைக் கண்டவர்கள் பலமுகமான உண்மையை எத்திசையிலிருந்தும் பெறக் கொடுத்து எல்லாத் துறைகளிலும் ஒளி பெற்றுத் திகழ்கிறார்கள்" என்று வருகிறது. உண்மை எவ்விடத்திலும் புகும் என்றதனாலேயே எல்லோர் நடுவிலும் தானும் ஒருவனாக நுழைந்து பார்க்க எந்த மனிதனுக்கும் உரிமை உண்டு. இயற்கையின் கோயிலுள் மனிதன் இடரின்றிப் புக விஞ்ஞானம் வழி திறந்து வைக்கிறது. ஆனால் இன்று அத்தகைய ஐரோப்பாவில் ஓர் உண்மை இல்லாத குறைமட்டும் தென்படுகிறது. அங்கே வாழும் மக்கள் தம் நடுவே மற்றொருவனை வரவிடாமல் தடுக்கிறார்கள் உள்ளத்தைப் பொருத்தமட்டில் ஐரோப்பியனால் உலகிற்கே தீங்கு ஒன்று நேர்கிறது; அந்தத் தீங்கு அவனுக்குந்தான்.

இந்தக் கப்பலிலேயே பிரெஞ்சு எழுத்தாளர் ஒருவருடன் பழகினேன். அவர், "மகாயுத்தத்திற்குப் பிறகே ஐரோப்பாவில் இளைஞர்களிடையே பெரியதோர் ஏக்கம் புகுந்துவிட்டது. அவர்கள் கொண்ட நோக்கத்தில் எங்கோ ஒரு சிறியபுரை கண்டுவிட்டது. அதன் வழியாக அழிவு சிறிது சிறிதாக வந்துகொண்டிருக்கிறது என்று நன்றாக அறிந்துகொண் டிருக்கிறார்கள். அதாவது, உண்மையிலிருந்து தாங்கள் வழுவி இருப்பது இத்தனை நாளுக்குப் பின்னேதான் அவர்களுக்கு விளங்கிற்று" என்றார்.

மனிதனுடைய உலகம் அமராவதி. அங்கே திகழும் உண்மை என்னும் கருவூலம் ஒரு நாட்டிற்கோ அல்லது ஒரு காலத்திற்கோ உரியதன்று. மனிதன் தன் இன்பத்திற்காக என்றென்றும் இந்தப் பொன்னுலகை விதம்விதமாக அமைக்கப் பார்க்கிறான். இதற்கு அடிப்படையாக உள்ளது, மனிதன் தன் அவாவை உருவாக்க எடுத்துக்கொள்ளும் எல்லையற்ற துணிவே. ஆனால் பெரியதோர் பொருளை நிருமிக்கப் போய், மனிதன் கையாளும் சிறு கள்ளத்தனமே பேராபத்தை விளைவிக்கிறது. மனிதனுடைய விருப்பம் முடிவற்றது. அந்தச்சக்தி குறுகிய வழியே தன்போக்கில் வழிந்து ஓடுமாயின் இரு புறமும் உள்ள கரையும் சரிந்து விழும்; அழிவின் வெள்ளம் நாடெங்கும் பாயும். மனிதனுடைய பேரவாவானது குறுகிய தன்னலத்திற்காக இருக்குமானால், அதுவே உலகில் அமைதியின்மையை உண்டாக்கும். எல்லோரும் பயனடையும் அளவில் இருந்தால்தான் மனிதனுடைய ஆசை, முயற்சி யாவும் ஈடேறும். அத்தகைய முயற்சியைத்தான் 'வேள்வி' என்று கீதை கூறுகிறது. இதன் மூலந்தான் உலகம் உய்யும்; பற்றற்ற வினை என்பதே சிறந்தது. அது ஒரு பொழுதும் வலிமை குன்றிப் போகாது. அது ஒருகாலும் சிறுமைப்படாது. ஆனால் அந்த வினையின் விளைவை ஒருவன் தனக்காக மட்டும் கோருதல் கூடாது.

விஞ்ஞானம் என்னும் தூயதவத்தின் மூலம் கோலிய வழி எல்லா நாட்டிற்கும், எல்லாக் காலத்திற்கும், எல்லா மக்களுக்குந்தான். மனிதனுக்கு அதுவே தெய்விகச் சக்தியைக் கொடுத்திருக்கிறது. பிணி, பசி இவற்றை மனித உலகினின்று அறவே ஒழிக்கப் படைக்கலங்களை உண்டு பண்ணுகிறது. மனிதனுடைய சொர்க்கத்தை நிறுவும் விசுவகருமனே இந்த விஞ்ஞானம். ஆனால் இந்த விஞ்ஞானம் தொழிலின் உருவு கொண்டு மனிதனுடைய ஆசையை அளவுக்கு மீறித் தலைதூக்கவிடுமாயின்

அதுவே யமனுக மாறிவிடுகிறது. இப்புவியில் மனிதன் அடியோடு அழிந்து மறைவானேயானுல், இதனுலேயே அந்த அழிவு நேரவேண்டும். உண்மையைக் கண்டபோதி லும் அதைப பயன்படுத்தும் வழி தெரியாமறபோனுல் தான் அவ்வழிவு நேரும். மனிதனுக்குத் தெய்விக வன்மை உண்டு. தெய்விகத்தன்மை மட்டும் அவன் பெறவில்லை. இந்தக் காலத்தில் மனிதரிடையே இத்தகைய தெய்விக வன்மையை ஐரோப்பாவில்தான் காணலாம். ஆனுல் அது மனித இனத்தை அடியோடு நாசமாக்கத்தான் தோன்றி யிருக்கிறதோ? சென்ற பெருஞ்சமரில் இந்தக் கேள்வியே பயங்கர உருவில் எவர் முனபும் நின்றது. ஐரோப்பாவுக்கு வெளியே எங்கேயும் இந்த ஐரோப்பியப் பேய் தோன்றத் தொடங்கிவிட்டது. அதற்கு அத்தாட்சி இன்று ஆசியா, ஆப்பிரிக்கா எங்கும் நிறையக் காணலாம். ஐரோப்பா தன் விஞ்ஞான நிதியுடன் நம்மிடத்தில் வரவில்லை. பேராசை குடிகொணடு,நம்மிடத்தில் இருபபதைத்தான் கவர வருகி றது. அதனுலேயே ஆசியா தன் உள்ளத்தில் ஐரோப்பா வின் ஒளி புகுவதைக்கூடத் தடுத்து விடுகிறது. விஞ்ஞா னச் செருக்குத் தலைக்கேறிப் பொருள் நசையால் உலகெங் கும் மனிதரை வாட்டும் இந்த முறையை நீண்ட காலமாக ஐரோபபா கையாண்டுவருகிறது. தன் வீட்டிலேயே அதனுல் நச்சுக்கனி விளைந்ததைப் பார்த்து இன்று அது அல்லற்படுகிறது. பசும் புல்லில் வைத்த நெருப்பு அதனருகிலுள்ள செழுந்தளிர் மரத்தையே பற்றிக் கொண்டது. இது எங்கே போய்நிற்குமோ என்ற வேதனை அதற்கு. இந்த இயந்திர உற்பத்தியை நிறுத்தினுல் அது நிற்குமோ? நான் அப்படிச் சொல்லவில்லை. ஐரோப்பியர் தம் விருப்பத்தைத்தான் நிறுத்தவேண்டும். தருமோபதேசத்தினுல் அது ஆகுமா? முற்றும் முடியாது. அதற்கு விஞ்ஞானத்துடன் உறவும் வேண்டும். உள்ளத்திலிருந்து பேராசையை அகற்றுவது

தருமத்தின் வேலை. ஆனால் அவாவின் மூலகாரணத்தை வெளிப்பக்கத்திலிருந்து அடியோடு கிளறி எறிவது விஞ்ஞானத்தின் தொழிலாகும். இரண்டும் சேர்ந்து புரியும் சாதனையே திருவினையாகும். விஞ்ஞான அறிவுடன் அறத்தில் பற்று உண்டாகும் நன்னாளைத்தான் இன்று உலகம் எதிர்நோக்கி இருக்கிறது.

ஜாவாவுக்கு யாத்திரை போகும் சமயத்தில் இது போன்ற சிந்தனைகள் எனக்கு வருவதேன் என்று நீ கேட்கலாம். அதற்குக் காரணம் இதுதான்: பாரத நாட்டின வித்தை ஒரு காலத்தில் அந்நாட்டிற்கு அப்பாலுள்ள நாடுகளில் பரவியிருந்தது. வெளிநாட்டார் அதை ஆதரவுடன் வரவேற்றனர். திபேத்து, மங்கோலியா, மலாயா எங்கும் இந்தியக்கலையும் சமயமும் பரவி அந்நாட்டாரின் உள்ளத்தில்பதிந்து உண்மைக்கான வழியைக் காட்டின. பாரத பூமியின் மேன்மை, சிறப்புடன் அந்நாடுகளில் ஓங்கியிருந்ததன் அடிச்சுவடுகளைப் பார்க்கவே தீர்த்த யாத்திரை செய்ய முனைந்தேன். இதை ஒட்டி ஆலோசனை செய்யவேண்டியவிஷயம் ஒன்று இருக்கிறது: பாரத நாடு விடுத்த செய்தி வெறும் வறண்ட பிரசாரமன்று. அது மனித உள்ளத்தில் பொங்கிவழிந்த செல்வத்தினை எல்லாத் திசையிலும் அள்ளித் தந்தது. கொத்து வேலை, சிலை நிறுவுதல்,ஓவியம், இசை,இலக்கியம் போன்ற துறைகளுக்குப் புத்துயிர் தந்தது. அதன் அறிகுறிகள் பாலை நிலத்திலும் காட்டகத்திலும் குன்றிலும் தீவுகள் தோறும் அணுகமுடியாத இடங்களிலும், கற்பனை ஒன்றிலேயே காணக்கூடிய வேறுபாட்டுடன் விளங்குகின்றன, துறவி உபதேசிக்கும் மந்திரம் மனிதனுடைய பாசத்தை அறுக்கிறது; மனிதனுடைய புலன்களைப் போக்கி விடுகிறது. அவனது சிந்தனைப் பெருக்கை எந்த வழியிலும் செல்லவிடாமல் அணை போடுகிறது. இது அந்த மாதிரி மந்திரமன்று. முதுமை படர்ந்து உயிர் ஒடுங்கியவ

ளுடையவாக்கன்று. பிராணவன்மை துள்ள, வீரியம் சுடர் விட இளமையின் ஆர்வத்தைத்தான் இங்கே காணலாம்.

[ஸ்ரீமதி நிர்மலகுமாரிக்கு எழுதிய கடிதம்]

## 2

ஊரை விட்டுப் புறப்படும்பொழுது, சிலர், அடிக்கடி ஏதாவது எழுதி அனுப்பும்படி, என்னைக் கேட்டுக்கொண்டார்கள். யாருக்காக எழுதுவது? அதைப் படிப்பவர்கள்தாம் யார்? பொது மக்களா? இந்தப் பொது மக்களின் பழக்கம் எனக்கு அவ்வளவாக இல்லை. இவர்கள் விருப்பத்திற்கு இணங்கி ஏதாவது எழுதுவதாக இருந்தால் நன்றாகத் தைத்த ஏட்டுத்திரளில்தான் வரைய வேண்டும். அந்த எழுத்துக்குள்ள மதிப்பு வேறு.

சொல் அவ்வளவாக முக்கியமன்று. எழுதும் வன்மைதான் கடிதங்களுக்கு ஏற்றது. வீட்டில் பழகுவது போன்ற சம்பாஷணைகளுக்குத் தலை அலங்காரமோ, கால் அணியோ எதுவும் இல்லை. தனக்காகவோ, பிறர் பொருட்டோ அது யாருடைய தயவையும் எதிர்பார்த்திருக்கவில்லை. அது எந்த விஷயத்தில் தலையிட்டாலும் பதில் சொல்லவேண்டிய அவசியமில்லை. அதன் நடமாட்டம் ஏதாவது வம்பளந்துவிட்டுப் போவதற்குத்தான்.

ஆற்றுநீர் ஓடும்பொழுது எழும் ஓசையானது அதன் அசைவின் மொழியே. அது, பறந்து செல்லும் வண்டின் சிறகொலி போன்றது. வம்பளப்பு என்று நான் எதைக் குறிக்கிறேனோ அது வேறு ஒன்றுமன்று; என் மனம் அசைவதன் ஓசையே. எழுத்துக்களின் மூலம் வெளிப்படும் இந்த வீண் அளப்பே கடிதம்.

வம்பளப்புக்கு மிகவும் அவகாசம் வேண்டும். அதைக் கேட்டு அநுபவிக்கத் தகுந்த ஆள் வேண்டும். நம் சொற்பொழிவுகளைக் கேட்கப் பலபேர் தேவை. ஆனால் நமது வீண் அளப்பைச் சுவைக்க இரண்டொரு பேர்

இருந்தாலே போதும். நாட்டில் பழக்கமான சுற்றத்தில் நாம் வளைய வருகிறோம். அன்றாடக் கடமைகளில் அழுந்தி யிருக்கிறோம். தெரிந்தவர், தெரியாதவர்கள் எல்லாக் கூட்டத்திலும் நுழைகிறோம். நமக்குள்ளேயே வேடிக்கையாகப் பேசிக்கொள்ள ஓய்வு கிடைப்பதில்லை. நம்முடைய விவகாரமெல்லாம் பலவிதமான உலகியல் விஷயங்களைப்பற்றியனவே. இது எதைப்போன்ற தென்றால் குளத்துப் படித்துறையில் பத்துப்பேர் கூடி நீர் மொள்ள வருவது போலத்தான்; ஆனால் நம்மிடையே சாதகப்புள் ளின் ஒரு தன்மையும் இருக்கிறது. காற்றில் மிதந்துவரும் மேகத்தில் அது மழையை நோக்கி ஏங்கி இருக்கிறது. மனம் என்னும் வானத்தில் மெல்லப் பறந்துசெல்லும்பாவனையே அந்த மேகம். அது விளையாட்டு என்னும் இறகு படைத் துச் செல்லுகிறது. அது தோன்றுவதும் மறைவதும் எதிர்பாராத விஷயம். அவசியத்திற்குத் தக்கபடி அதை ஒரு கட்டுத் திட்டத்திற்கு உட்படுத்துவது முடியாத காரியம். அதனாலேயே அதற்குச் சொல்லொணு மதிப்பு. நிலம் தன்னிடத்தில் உள்ள நீரை வானில் பறக்கும் திவலையாக மாற்றுகிறது. தன்சொந்தப்பயிர்நிலங்களுக்கு ஈரம் தருவதற்கே அந்த மழை நீரை உபயோகப்படுத்திக் கொள்ளுகிறது. ஓர் உத்தேசமுமின்றி மனத்தோடு பேசிக் கொள்வதற்கு ஓர் அவசியம் ஏற்படுகிறது. மனம் தன்னுடைய பாவனைத் தாரைகளை எழுப்பித் தன்மீதே பொழிந்துகொள்ளுகிறது.

வாழ்க்கை யாத்திரையின் பழக்கமான சுற்றத்தி லிருந்து வெளியேறியதும், இன்று என் மனம் பலவித பாவனைகளில் திளைத்து நிற்கிறது. ஆகவே, பத்திரிகைக் காரர்களுக்காகக் கட்டுரை எதுவும் எழுதாமல் உனக்குக் கடிதம் வரைய விரும்பினேன். நான் எழுதும் விஷயம் இலை யைப் பரப்பி உணவைப் பரிமாறுவது போன்றதன்று; மரத்தடியில் நின்றுகொண்டு காற்றில் அடிபட்டு விழும்

கனிகளைப் பொறுக்கி, மடி நிறையத் தருவது போன்றது தான். அவற்றுள் சில காயாகவும் இருக்கும்; சில பழுத்தும் இருக்கும்; சிலவற்றுள் நல்ல நிறம் பிடித்திருக்கும்; சில பச்சை மாறாமலும் இருக்கும். வைத்துக்கொள்ள வேண்டிய பழுத்த விஷயங்களும் உண்டு. தள்ளக்கூடிய வெம்பிய பொருள்களும் உண்டு. தள்ளிவிடுவதனால் குறை கூறுவார் எவருமில்லை.

இந்த மனோபாவனையில் கடிதம் எழுத ஆரம்பித்தேன். ஆனால் வானத்தின் முகம் களையற்று அழுது வடிந்தது. இரவு விருந்து நடந்து முடிந்தது. நண்பர்கள் எல்லாரும் சென்ற பின்னர் ஆள்காரன் லஸ்தர் விளக்குகளை அணைத்துவிட்டுப் புகை படிந்த லாந்தரை ஏற்றிவைத்தான். அதுபோலவே. நிலையாக இருக்கும் ஒருவன் புகை படிந்தது போன்ற ஒரு போர்வையால், வான அரங்கை மூடிவிட்டான். இந்த நிலையில் என் மனம் தான் விரும்பியபடி ஓட மறுக்கிறது. அதன் இலேசான எழுதுகோலின் விளையாட்டு நின்றுவிடுகிறது. சில சமயம் இந்த வம்பளப்பின அருவி கரைவழிந்து ஓடும் ஆறாக மாறி ஆழ்ந்த பள்ளங்களில் இழிந்து செல்லும்; சூரிய கிரணங்களை முத்தமிடும். சிலிர்ப்பினால் ஒரு சமயம் அது சலசலவென்று சிலம்பொலி செய்தது. ஆனால் இப்பொழுது ஓர் இலக்கைப் பிடிக்கவே அது தாவி ஓடுகிறது. நோக்கின்றிப் புறப்பட்ட இலக்கியம் மனிதர் உறையும் இடத்திற்கு வந்ததும ஒரு நோக்கத்தையே கொள்கிறது. அப்பொழுது வாக்குவன்மையை மீறிப் பாவனைகள் தலை தூக்கி நிற்கின்றன.

உபநிடதத்தில் "நம்மைப் படைப்பவர் ஆருயிர் நண்பர். நம்மை இயக்குபவரும் அவரே" என்று இருப்பதைக் காணலாம். படைப்பதில் இயல்பான களியாட்டம் தென்படுகிறது. இயக்கும் வேளையில் சிந்தா சக்தி இருப்பதை உணருகிறோம். சுவை மிகுந்த இலக்

கியம் எதுவோ, அது படைப்பவனின் சொந்த ஆட்சிக்கு உட்பட்டது. காரியவாதி ஒருவன் பிரமனை, "எதற்காகப் படைக்கிறாய்?" என்று வினவுவானாயின், அவன் என்ன பதில் தருவான்? "என் விருப்பம்" என்று தான். அந்த விருப்பம், பலநிறமாகவும் பல சுவையாக வும் தன்னுள்ளேயே படர்ந்து பெருகி மூழ்கி இருக்கிறது. குவளை மலரை, "நீ எதற்காக உண்டானாய்?" என்று கேட்டுப் பாருங்கள். "நான் உண்டாவதற்கென்றே உண் டானேன்" என்றுதான் சொல்லும். உண்மை இலக்கிய மும் இந்தப் பதிலையே தரும்.

அதாவது: படைப்புத் தொழிலுக்குப் பல திக்குகள் இருக்கின்றன. அதில் ஒரு திக்கு, படைப்போனின் வம்பளப்புக்கென்றே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. அந்தத் திசையிலிருந்தே அவன் எனக்குக் கடிதம் எழுதுகிறான் என்று கூடச் சொல்லலாம். நான் எழுதிய கடிதத்திற்குப் பதில் அன்று; அவனுக்கு ஏதாவது சொல்லவேண்டுமென்று விருப்பம். அதனால் தானேசொல் கிறான். தன்மனத்தைவிட்டு அவன் எவரிடமேனும் சொல் லித்தானே ஆகவேண்டும்? அதைப் பெரும்பாலோர் மனங் கொடுத்துக் கேட்பதில்லை. சாரமற்றவை என்று ஒதுக்கி விடுகிறார்கள். இதுவோ ஒரு நண்பனின் அந்தரங்கமான உரை. சொத்துச் சுதந்திரத்தின் பத்திரம் அல்ல. சார முள்ள விஷயங்கள் பூமியின் வயிற்றினுள்தான் இருக்கும். பூமியின் பொற்சுரங்கங்களில்தான் அவைகளைக்காணலாம். மலர்ச்சோலைகளில் காணமுடியாது. வைகறை வானில் திகழும் மேகத்திரளில் அவை அகப்படா. அவன் எனக்கு விடுக்கும் இந்த அதிசயமான கடிதங்களைப் படித்து இன்புறுகிறோமே என்று எனக்கு ஒரு பெருமை. உலகத்தின் வம்பளப்பு அனைத்தும் இதன் மூலமாகத் தான் எனக்கு எட்டுகிறது. இதனால் உலக அலுவல் களுக்கு இடர் விளைகிறது. என்னை உலகத்தவர் கூட்டத்

தில் பிணைக்க அரும்பாடு படுவோரின் நிந்தனைக்கு ஆளாகிறேன். என்னுடைய தசை அப்படி இருக்கிறது.

இதில் ஒரு சங்கடம்: விதிபுருஷன் என்னை என் விருப்பப்போல் விடவில்லை. பிரமனின் ஆடரங்கிலிருந்து விதிபுருஷனின் யந்திரசாலை வரைக்கும் ஒரு பாதை நீள்கிறது. அதன் இரு மருங்கிலும் நான் நடமாடவேண்டியிருக்கிறதே!

இந்த இடுக்கணில் சிக்கி நான் ஒரு விஷயத்தைக் கற்றுக்கொண்டேன். படைப்பவனே இயக்குபவன்! அதனாலேயே அவனுடைய படைப்பும் இயக்கமும் ஒன்றாக இணைந்திருக்கின்றன. அவனுடைய திருவிளையாடல், தொழில் இவற்றின் இடையே வேறுபாட்டைக் காண முடியாது. அவன் செய்யும் செயலெல்லாம், அரிய கலைநுணுக்கம் உடையன. அவை ஓய்விலும் உழைப்பிலும் உருக் கொள்வன. தொழில் என்னும் உருண்டைக் கல்லின்மேல் அழகைச் செதுக்கி வைப்பதில் தான் அந்தப் படைப்பின் இன்பம் இருக்கிறது. தொழிலை அவன் தாழ்வுபடுத்தவில்லை. உடற்கூட்டினுள் பல நுண்ணிய இயந்திர உறுப்புக்கள் வைத்திருக்கிறான். ஆகவே, அது வேலை செய்கிறது. ஆனால் அதை அழகினுடைய வனப்பினாலும் போர்த்திருக்கிறான். இந்த வெளித்தோற்றமே எல்லாரையும் கவர்கிறது.

மனிதனுக்குக்கூடப் பிரமன் படைக்கும் உரிமையைக் கொடுத்திருக்கிறான். எல்லாவற்றையும் விட இதுவே மனிதனுக்குக் கிடைத்த உயர்வான பேறு. மனிதன் தான் செய்யும் தொழிலின்மேன்மையை உணரும்பொழுது அந்தத் தொழிலுக்கு ஓர் அழகைத் தர முயல்கிறான். வசிப்பதற்கு வீட்டைக் கட்டுவதோடு அதை அழகாகவும் அமைத்துக்கொள்கிறான். இவ்வாறே தான் உண்ணும் கலங்களிலும், உடுத்தும் ஆடைகளிலும் பலவேறுபாடு திகழப் படைக்கிறான். வாழ்க்கைக்கு இன்றியமையாத

பொருள்களைவிட அவன் புனையும் அலங்காரங்கள் ஒரு படி அதிகமாகவே இருக்கும். அவரவர்கள் இயற்கை யின்படி இது அமையும்.

தொழிலும் கலையும் சேர்ந்ததோர் அரிய பண்பில் ஆற்றாமை என்னும் பகைவன் புகுந்துவிட்டால் மனி தத்தன்மை அடியோடு அழிந்து விடுகிறது. ஆற்றாமை, மனிதனுடைய இழிவான இயற்கையிலிருந்து முளைப்பது. அதற்கு வெட்கம் என்பது இல்லை. தனக்குள்ள இந்த இழிந்த தன்மையைப் பெருமை அடித்துக் கொள்ளு கிறான் மனிதன். மிகுந்த இலாபத்திற்கு ஆசைப்படும் ஆலைமுதலாளிகள் இனிய நதிக் கரையைப் பாழாக்குவ தோடு நில்லாமல் அவ்வாறு செய்வதில் பெருமையும் கொள்கிறார்கள். மனிதன் பல பொருள்களிலும் சுவையை நுகரவேண்டும்; அவர்களோ இந்தத் தன்மையைச் சிறிதும் பொருட்படுத்துவதில்லை. தம்முடைய வியாபாரப் பெருக்கத்திலேயே கண்ணாக இருக்கிறார்கள்.

புது யுகத்தின் வெளி உருவில் இந்த வெட்கக் கேடான விஷயம் நிரம்பி இருக்கிறது. ஜீரணப்பை உடம் பின் மறைவிலிருந்து தன் சிக்கலான உறுப்புக்களுடன் எல்லார் எதிரிலும் தோன்றிக் கூசாமல் தன் வேலையைச் செய்தால் எப்படி இருக்கும்? இந்த ஆற்றாமையின் போக் கும் அப்படியே. தனக்குத்தான் பசி, தன்னிடத்தில் தான் நுட்பமான ஜீரணக் கருவிகள் இருக்கின்றன என்ற இறுமாப்பில் உடலின் மற்ற அவயவங்களைப் புறக்கணித்துவிட்டு அது தானே வளர முற்படுகிறது. ஆற்றாமை கொண்ட வயிறு தனக்குள்ள பசியையே எல்லாவற்றையும்விடப் பெரிதாக எண்ணும்பொழுது நமக்கு அது அருவை நிரம்பிய பொருளாகிறது. இதைக் குறித்து அது துளியும் வெட்கப்படுவதில்லை. ஆற்றாமை என்னும் பகையைப் பாராட்டி வளர்ப்பதுதான் அநாகரி கத்தின் முதல் அறிகுறி. நாகரிகத்தின் மெருகு பூசிய

முத்திரையை அது பூண்டிருந்தால்தான் என்ன, அநாகரி
கத்தின் மிருகத் தோலை மாட்டிக்கொண்டு பேயாட்டம்
ஆடினால்தான் என்ன! 'ஜாஸ் பாண்டு'தான் வாசிக்கட்
டுமே; அதன் மதிப்பு அவ்வளவுதான்!

இக்காலத்து நாகரிகச் சமுதாயத்தின் சுவையறியும்
ஆற்றலுக்கும் அதன் அறிவுத்திறமைக்கும் இடையே
அதிக வேறுபாடு தென்படுகிறது. இதற்கு ஒரே
காரணம்: ஆற்றாமையே. வேறு விதமான செயல்களைப்
பின்னால் தள்ளிவிட்டு அது தன் வயிற்றைமட்டும் நிரப்பிக்
கொள்ளுகிறது. அதிகப்படியாகப் பண்டங்களை உற்பத்தி
செய்யும் வெறியில் அழகிற்கு இடம் தர மறுக்கிறது.
படைப்பு இன்பத்திற்கும், பொருள் நசைக்கும் இடையே
வளரும் இந்தப் பகைமை மானிட தருமத்தையே கலக்கிப்
பெரும் புரட்சியை உண்டாக்கும். இந்தப் போரில் அடிமை
கள் வெற்றி பெறினும் சரி, வயிறு வெடிக்கும் ஆற்றாமை
ஓங்கி நின்றாலும் சரி, எமன் தன் தூதுவரை அனுப்பி
இதற்கு ஒரு முடிவைக் கொண்டுவராமற் போகமாட்டான்.

இழிந்த இயற்கையின் பிறவியே இவ்வாற்றாமை என்று
நான் முன்பே சொல்லியிருக்கிறேன். இந்த ஆற்றாமைக்குப்
பருத்த உடல் உடைய உடன்பிறந்தவள் ஒருத்தி இருக்கி
றாள். அவள் பெயர் சோம்பல். ஆற்றாமையில் ஒரு சுறு
சுறுப்பைக் காண்கிறோம். இதுவே அதை விகாரப்படுத்து
கிறது. சோம்பலோ இதற்கு நேர்மாறானது. அதனால் ஒரு
வேலையும் செய்ய முடிவதில்லை. அதற்கு ஒழுங்காக இருப்
பதற்கும் தெரியாது. அழுக்கை விலக்குவதற்கும் தெரி
யாது. முயற்சியின்மையே அதற்குள்ள விகாரம். அதுவே
நம் நாட்டில் மனிதனுக்கு உரிய மரியாதையைப் போக்கி
விட்டது; நம்முடைய வாழ்க்கை முறையில் இருந்த அழகை
எல்லாம் நசுக்கிவிட்டது. அதனால் நம் வீட்டிலும், நம்
சுவையிலும் நடை உடை பாவனைகளிலும் தனிப்பட்ட
அழகே இராமற் போய்விட்டது. அதன் இடத்தை

அறிவீனமான ஆடம்பரம் பிடித்துக்கொண்டுவிட்டது. இந்தச் சோம்பல் நன்றாக வளருவதற்கும் ஆடம்பரவாழ்வு மேலும் நடத்துவதற்கும் தூண்டுதலாக இருப்பவை சீமைச்சரக்கு விற்கும் கடைகளே.

சிறந்த அறிஞரான பங்கிம் பாபுவைப்போல எனக்கும் என்னுடைய எழுத்துக்களை 'ஏமப்புணை' யாக்கவேண்டுமென்று எண்ணம். ஆனால் எங்கிருந்தோ பண்டங்கள் அதிகமாகக் குவிந்து விடுகின்றன. முயற்சி யென்னும் அருங்கலம் வெறும் பாரம் ஏற்றிய மரக்கலமாகி விடுகிறது. என் மனத்துள் பலவாறான கிளர்ச்சிகள் மூள்கின்றன. எழுதுகோலின் ஒலியைக் கேட்டதும், அவை இடம், பொருள், ஏவலைக் கவனியாமல் வெளியே வருகின்றன. என் பிரசங்கங்கள் ஒருவிஷயத்தைக்குறிப்பன அல்ல; அவை 'ஆம்னிபஸ்'ஸில் ஏறிச் செல்லும் பிரயாணிகளை ஒக்கும். அதில் மெத்தையில் உட்கார்ந்திருப்பவர்களும் உண்டு; படிச் சட்டத்தில் நிற்பவர்களும் உண்டு; நினைத்த இடத்தில் குதித்து இறங்குபவர்களையும் பார்க்கலாம்.

இன்று ஆவணி மாதம் முதல் தேதி. இந்த மாதம் ஒரு நாடோடியைப் போல் தன் கருமுகில் கூடாரத்தைச் சுருட்டிக்கொண்டு எங்கே செல்லுகிறதோ தெரியாது. இன்று வானகத்தின் கலைவாணி 'நீலம் ஆர் குவளை' மலரில் வீற்றிருக்கிறாள். உலகெல்லாம் வளைத்துக் கொண்டு என் மனம் அம்மலருடன் சேர்ந்து களிப்பெய்தி ஆடுகிறது. ஒளியின் ஒரு கதிராகவும், வாணியின் ஒரு மூச்சாகவும், இசைப்பெருக்கின் ஓர் அலையாகவும், நான் வானிலும் நீரிலும் நிலத்திலும் சிதறிக் கிடப்பதுபோன்ற இனிய மயக்கம் உண்டாகிறது. கடல் தொன்மை தொட்டு முழக்கும் முரசொலி என் செவியில் கேட்டுக்கொண்டே இருக்கிறது. மாநிலத்தின் கரையில் எழுந்து மடியும் அதன் அலைகளின் சந்தத்திற்கு ஏற்ப, மங்கலான ஆரம்பத்திலிருந்து தெளிவற்றதோர் இறுதியை நோக்கி வாழ்வு

பயணம்போகிறது. மலையளவு உடல் படைத்த ஜந்துக்கள் பிரமன் காணும் கெட்ட கனவுபோல் கும்பலாகத் தோன்றி மறைந்து ஒழிந்தன. பின்னர்ச் சரித்திரத்திற்கு முற்பட்ட எந்த இருண்ட யுகத்தில் மனிதன் தன் வாழ்க்கையைத் தொடங்கினனோ? ஆதிமனிதன் வாழ்ந்த இடம் எந்தக் குகையோ, எந்தக் காடோ நமக்குத் தெரியாது. இரண்டு கால்களின்மேல் நிற்கும் ஒரு குட்டி ஜீவன் வலிமை மிகுந்த பிரம்மாண்ட வடிவுடைய ஒரு கொடிய ஜந்துவின்மீது, விஷ்ணு கருடன்மீது ஊர்வதுபோல் ஏறி உட்கார்ந்துகொண்டான். சாதிக்க முடியாததைச் சாதிக்கும் ஒரு மகத்தான துணிவு சிதைந்து ஒழியும் பலயுக முடிவுகளையும் தாண்டிச் சென்றது. அந்தக் காலச் சிதைவுடன் எல்லை வளர்த்துக்கொண்டு கடல் என்னும் வருணனின் மிருதங்கநாதம் அலை அலையாக இரவும் பகலும் அதிர்ந்துகொண்டிருக்கிறது. அதன் ஓங்காரம் என செவியில் கேட்டுக்கொண்டிருக்கிறது. இன்று என கண்ணெதிரே ஒளிபட்டுச் சிலிர்த்துக் கோலாகலம் செய்யும் நீல வாரிதியை நோக்கித்தான் ஆங்கிலக் கவி ஷெல்லி இந்தக் கவிதையைப் பாடியிருக்கவேண்டும்:

The sun is calm; the sky is clear;
The waves are dancing, fast and bright.

[கதிரவன் அமைதியோடு திகழ, வானம் தெளிந்து விளங்க, கடலலைகள் விரைந்து துள்ளி ஒளிர்கின்றன.]

ஆனால் இவ்வழகியபாட்டு களிப்புற்ற அவர் வாழ்வின் கடைசிச் சோக கீதம். இன்று எனக்கு உள்ளத்திலாவது, புறத்திலாவது எந்த விதமான துயரின் இருளும் தென்படவில்லை. உலகெல்லாம் பரவிய அழுகையின கம்பலையை என் செவி உணர்கிறது இந்த அழுகையின் ஓலம், முதலில் விசும்பிடையேதான் நிரம்பி இருந்தது. படைப்பின் தொடக்கத்தில் சராசரங்களை உண்டு

பண்ணும்போது எழும் வேதனைக் குரலே அது. அதனால் தான் வானத்தைக் 'கிரந்தசி' என்றன வேதங்கள். இந்த அழுகைக் குரல் தளர்ச்சியாலும் ஏமாற்றத்தாலும் உண்டானதன்று. இது புதிதாகப் பிறந்த குழந்தையின் கூக்குரலே. அது வீரிட்டு அழுதுதான் உலகில் இருப்பதை அறிவிக்கிறது. எல்லை காணாத வருங்காலவாயிலில் நிற்கும் விருந்தாளி உணர்வுடன் இருப்பதைத் தெரிவிப்பதில் தான் அழுகையின் வேகம் அடங்கி இருக்கிறது. உயிரைப் பெறும் உரிமை செயலற்றுக்கிடந்தால் வருமா? ஒவ்வொரு கணமும் போராடித்தான் அதைப் பெறவேண்டும். அதனாலேயே இந்த அழுகை இவ்வளவு தீவிரமாக இருக்கிறது. ஜீவ உலகில் எல்லாவற்றையும் விடப் பெரிதாக ஒலிப்பது மனித இயற்கை புத்துயிர் எடுக்கும்பொழுது தோன்றும் அழுகையே. இருளின் கருவைக் கிழித்துக்கொண்டு புறப்படும் ஒளிக்கதிர் போன்றது இந்த அழுகை. இந் நிகழ்ச்சி காணும் யுகந்தோறும் தேவருலகில் மங்கள துந்துபி முழங்குகிறது. அகில புவனங்களைப் படைத்த பெரிய பாட்டனார் முகமன் செய்து இந்தப் புதிய விருந்தாளியை வரவேற்கிறார்.

இவை யாவும் நான் முடிவாகக் கண்டறிந்த விஷயங்களல்ல. இன்று இளங்காலையில் கடலின் விளிம்பில் வானம் அழியாததோர் ஒளி நிரம்பிய சொல்லை வரைந்திருந்தது. அது அமைதியைச் சொல்லும் வாக்கு; மண்ணுலகில் பல யுகமாக, பல துயரின் அலங்கோலங்களை மீறி எழும் வாக்கு. கண்ணீர் அலைமேல் மிதக்கும் வெண்டாமரை போன்றது அந்த அமுதவாணி. பிறகு பொழுது சாயும் சமயம், மனிதத்தன்மையே குலைந்து போன ஒருவனைக் கண்டேன். சமயம் வரும்பொழுது அவனைப்பற்றி எழுதுகிறேன். மனிதனுடைய சரித்திரத்தின் திசைமுடிவில் பகைமைக் காரிருள படர்வதையும், அமைதியைக் குலைக்கும் இடிமுழக்கத்தையும் உலகைச்

சுளித்து நோக்கும் ஒரு பயங்கரத்தையும் அப்போது கண்டேன்.

## 3

காட்டுயானை உபத்திரவமே உருவெடுத்த ஜந்து; இடி குமுறும் புயல்மேகம் போன்றது. சிறிதளவு பிராணியான மனிதன் - யானையின் காலுக்குக்கூட எட்டாதவன் - மலைபோன்ற அதன் வடிவத்தைப் பார்த்ததும் அலட்சியமாக, "இதன்மேல் ஏறிச் சவாரி செய்வது பிரமாதமா!" என்றான். கட்டுக்கடங்காத இப்பெரிய மாமிசப் பருவதம் பிளிறித் துதிக்கையை உயரத் தூக்கிக்கொண்டு கடுவேகமாக வருவதைப் பார்த்து மெல்லிய மனிதன் இந்த விருப்புமொழியைச் சொன்னான் என்றால் வியப்பாக இல்லையா? 'சவாரி செய்வேன்' என்ற உறுதியிலிருந்து, ஏறிச் சவாரி செய்த வெற்றிக்கோலம் வரை, இடையே நிகழ்ந்த வரலாறுதான் அதியற்புதமானது. வெகு நாள் வரை இந்தப் பிரதிக்ஞை கைகூடாத நிலையிலேயே இருந்தது. அப்பால் எத்தனையோ தோல்விகளும் இடர்களும் மனிதனுடைய உறுதியைக் குலைத்தன. அவைகளை யெல்லாம் கணக்கிடுங்கால் மனிதன் உலகில் நிலைப்பானோ என்ற சந்தேகமும் இருந்தது. கடைசியில் ஒருநாள் மனிதன் அத்தகைய கொடிய ஜீவன்களை அடக்கி ஆண்டான். தன் விருப்பப்படி எந்த இடத்திலும் அதைப் பயன்படுத்திக்கொண்டான். இதனாலேயே ஆபத்து வருங்காலம் மனிதன் வேழமுகத்தோனை கணேசனைச் சித்தி தரும் கடவுளாகப் போற்றலானான். இந்த வெற்றிக்கு இரண்டு பிராணிகளின் முக அமைப்பு உண்டு. இரகசியங்களைத் துருவிப் பார்க்கத் தகுந்த நல்ல மோப்பமும், கூர்மையான பார்வையும் கூரிய பற்களும் ஒருங்குகூடின; ஆவலும் சுறுசுறுப்புமே அம் முதல் தோற்றம். இதற்கு உருவகம் பெருச்சாளி. இதுவே வெற்றியின் வாகனம்; மற்றொரு தோற்றம், யானையின் இலட்சணங்கள் நிரம்பியது. வசியப்பட்ட

மான எருமைக் கிடாவைப்போல் அது பயங்கரமான உருவம் கொண்டிருந்தது. திசை முடிவு வரையில் கொந்தளிக்கும் அலையின் கூட்டம் எவரையும் "வராதே என்று புருவம் நெரித்தது. எதற்கும் அடங்காத மனிதன், "இந்த மிரட்டலுக்கா நான் பயந்து போவேன்?" என்றான். "அடங்காது போனால் அழிந்துபோவாய்' என்று இடிமுழக்கம்போல் பதில் வந்தது. மனிதன் தன் துளியளவு கட்டை விரலை ஆட்டி, "போனால் போகிறேன்" என்றான். மனிதன் பிறவியிலேயே புரட்சியாளன். இந்தப் பதில் அவன் தன்மைக்கு ஏற்றதே. இந்தப் பண்புடையவர்களே எந்தக் காலத்தும் வெற்றி பெற்று வருகிறார்கள். தொடக்கத்திலிருந்தே இயற்கையின் கட்டுப்பாடுகளை எதிர்த்து மனிதன் பல வழிகளில் தன் கொடியை உயர்த்தியிருக்கிறான். இன்றளவும் இந்தப் பிடிவாதம் இருந்துகொண்டுதான் இருக்கிறது. மனிதருள் உண்மையான புரட்சியாளர்களை-எவரது ஆட்சியையும் ஒப்புக்கொள்ளாத துணிவு உடையவர்களே-உலகத்தை ஆள்வார்கள். என்சான் மனிதன் அலட்சியமாக இந்தச் சமுத்திரத்தை, "நான் கடப்பேன்" என்று மார்பு தட்டியபொழுது வானவர் ஏளனமாகச் சிரிக்கவில்லை. இந்தத் துணிச்சலான பிராணியின் செவியில்தான் வெற்றிக்கான மந்திரத்தை ஓதி அது தரும் பலனை எதிர்பார்த்திருந்தார்கள். சமுத்திரத்தின்மேல் ஊர்வது இன்று கடினமான விஷயமன்று. சமுத்திரத்தின் அடியில் திகழும் ராஜ்யங்கூட மனிதன் கைக்கு வந்துவிட்டது. முயற்சியின் பாதையில் அடிக்கடி பயங்கரங்கள் தோன்றி ஏளனம் செய்கின்றன. புரட்சியாளனுடைய உள்ளத்தில் வீற்றிருக்கும் ஒருவன் துளியேனும் கலங்காமல் அடிக்கடி, "பயப்படாதே" என்று மனிதனைத் தட்டிக்கொடுக்கிறான்.

நேற்று எழுதிய கடிதத்தில் 'கிரந்தசி' என்ற விஷயத்தை விவரித்தேன். பிராணனை உண்டாக்கும் வேதனை

கிரக நட்சத்திரங்கள் மூலமாகத் தெரிகிறது. எதையும் எதிர்த்து நிற்பது இந்தப் பிராணனின் குணம். எல்லை இல்லாததும் உருவெடுக்காததுமான ஓர் இயற்கைக்கும் இதற்கும் நடந்த போராட்டம். புலப்படாத ஒரு பகிரண்டத்திற்கு எதிரே இது அற்பமே. ஆனால் முடிவற்ற இருட் கடலில் கோடிக்கணக்கான சிறுசிறு ஒளிப்படகுகளை இதுவே மிதக்கவிடுகிறது. இடம்,காலம் இவற்றைப் பீறிக்கொண்டு இது திக்குவிஜயம் செய்யப் புறப்படுகிறது. சிலபடகுகள் மூழ்கி மறையச் சில தலைதூக்கி நிற்கின்றன. படைப்பின் யாத்திரை மட்டும் முடிவதில்லை.

இந்தப் பிராணன் புரட்சிக்கொடியைப் பறக்கவிட்டுக் கொண்டு இவ்வுலகிடை ஒரு காலத்தில் சக்தியற்ற உருவிலேயே தோன்றியது. பெரிதும் வன்மையானதும் கனத்ததுமான சடப்பொருள் நாற்புறமும் வளைத்துக்கொண்டு இச்சிறு பிராண சக்தியைத்தன்னுள் அடக்கியாளப்பார்க்கிறது. ஆனால் புரட்சியின் உருவான இந்தப் பிராணன் சலித்துப் போகவில்லை. சிறைச்சுவரில் பிளவு எங்கே என்று அலைந்து தேடுகிறது. கடைசியில் ஒளிவரும் திசையை நோக்கி நழுவி வெளியேறிவிடுகிறது. இந்தப் பிராணனின் புரட்சிமந்திரத்தைப் பயின்றுதான் மனிதன் இவ்வளவு தூரம் முன்னுக்கு வந்திருக்கிறான். வேறு எந்த ஜீவன் இவ்வளவு உழன்றிருக்கிறது? மனிதனுள் குமிழ்க்கும் இந்தப் புரட்சிப்பான்மை ஓங்கி வளர வளர உலகசரித்திரத்தில் பெரு மாறுதல்கள் காண்கின்றன. அவனுக்குக் கிடைத்த இந்த அதிகாரம் வெறும் பிராணத்தின் பெருக்கத்தினால் உண்டாகவில்லை; பிராணன் தரும் செல்வத்தினால்தான் உண்டாயிற்று.

இந்தப் புரட்சியின் சாதனை துன்பம் மிகுந்த சாதனையே. இந்தத் துன்பமே யானை எனலாம். இந்தத் துன்பமே விரிகடலாகும். வீரச் செருக்கினால் இதன் முதுகின்மேல் ஊர்ந்தவர்கள்தான் உலகில் வாழ்ந்தார்

கள். நடுங்கிப்போய் இதன் அடியில் மூழ்கியவர்கள் எல ரொன்றும் மறைந்து ஒழிந்தனர். இதனருகே வராமல் நழுவிப்போய் இலவசமாக இலாபத்தைக் காண முயல்வோர் வெறும் போலியைச் சுமந்துகொண்டு தலையிறக்கத்துடன் வளைய வருகிறார்கள். நம் வீட்டருகே இத்தகைய மனிதர்கள் பலரைக் காணலாம். வீர முழக்கம் செய்யக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். அதுவும், கூடியவரை அதனால் சங்கடம் வராதெனத் தெரிந்துகொண்டுதான் இபபடிச் செய்கிறார்கள். உதை வாங்கிக்கொள்ளும்பொழுது அவர்கள், ''ஐயோ, உதைக்கிறதே'' என்று முறையிடுகிறார்கள். அவர்கள் ஆண்மையின் பரீட்சைக்கூடத்தில் அமர்ந்து பெரிய புத்தகங்களிலிருந்து வீர வாசகங்களைத் திருடி வரைகிறார்கள். ஆனால் இந்தக் காகிதப் பரீட்சை கைப் பரீட்சையாக மாறும் சமயம், ''எதிரி கொடியவன். நம்மை ஓங்கவிடவில்லை'' 'என்றெல்லாம் கூச்சல் போடுகிறார்கள்.

நரனை நாராயணன் தன் தோழனைப் பாவிக்கும் பொழுது அவனுக்கு உரிய மதிப்பைத் தந்து தன் உக்கிர வடிவைக் காட்டுகிறான். அப்போது மனிதன் அந்தத், திவ்வியக் காட்சியின் எதிரே நின்று மெய்சிலிர்க்க ''அழியா மொய்ம்பன் நீயே. அளவற்ற பராக்கிரமம் உடை-யோய் - எல்லாவற்றையும் விழுங்குவதும் நீயே. அனைத்தும் நீயே ஆவாய்'' என்று துதிக்கிறான்.

## 4

நாளைக் காலையில், சிங்கப்பூர் வந்து சேருவேன். பிறகு நிலத்தில் செல்லும் படலம் ஆரம்பமாகிறது. இப்பொழுது என் மனத்துள் பொங்கி வழியும் வம்பளப்புக்குத் தடை ஏற்படும். தரையில் கால் பட்டவுடன் ஒழிவு இராது என்ற குறையினால் அன்று; சில நாளாக என் மனம் ஒரு வழியில் சென்றுகொண்டிருந்தது. திடீரெனத் திசை தவறி வேறு பாதையாக அது செல்லுமோ என்றுதான் இ

தத் தயக்கம். திசை தப்பிச் செல்வது எதனுல்? பொது மக்கள் என்னும் ஒரு மனிதக்குழாம் இருக்கிறதன்ருே; அதன் கவர்ச்சியினுல்தான்.

எழுதும்பொழுதும் அதனுடைய கவர்ச்சி சிறிதேனும மனத்தில் படியாதென்று சொல்வதற்கில்லை. அது நெருங்கி வரவர என் எழுத்திற்குத் தடை ஏற்படுகிறது. மேல் விழுந்து ஏதாவது வேண்டுகோள் விடுத்துத் தொந்தரை இழைக்கிறது. அது வேண்டிக்கேட்கும் விஷயம் அதன் மனத்திற்கு விருப்பமானதாகத்தான் இருக்கும். புறத்தில் வந்து தாக்கும் இந்தப் பொதுமக்களின் விருப்பத்தைக் கண்டு என் எழுதுகோல் கூச்சத்துடன உள்ளுக்கு இழுத்துக்கொள்கிறது. உங்களைப்பற்றி எனக்கு அவசியமில்லை என்று அவர்களைப் பார்த்துச் சொல்லவேண்டுமென்று தோன்றுகிறது. ஆனுல் நான் உரக்கச் சொல்லும் மறுப்பே அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கியதைக் காட்டுகிறது.

உண்மையில் இன்று பொதுமக்களே இலக்கிய மன்றத்தில் அரசபதவி பெற்றிருக்கிருர்கள். இந்தப் பேருண்மையைப் புறக்கணித்து எழுத உட்காருவது நடக்காத காரியம். 'எதற்காகப் புறக்கணிக்க வேண்டும்? இலக்கியம் பொதுமக்களுக்கென இராததோர் காலம் எப்போதாவது இருந்ததுண்டா?' என்ற கேள்வி எழலாம்.

இது ஆலோசிக்க வேண்டிய விஷயந்தான். காளிதாசனுடைய 'மேகதூதம்' பொதுமக்கள் படித்து இன்புறவே எழுதியதென இன்று பிரமாணமாகிவிட்டது. ஒரு சாரார்க்கென அதை எழுதியிருந்தால் இன்று அவர்களுடன் அந்த 'மேகதூதம்'போன இடம் தெரியாமல் போய் இருக்கும். இந்தக் காலத்தில் 'பொதுமக்கள்' என்று யாரை நாம் குறிப்பிடுகிருமோ, காளிதாசன் வாழ்ந்த சமயத்தில் இவர்கள், மேலே உராய்ந்து எதற்கும் செவிசாய்க்கும் மக்கள் அல்லர். அப்படி இருந்திருப்பார்

களாயின் யுகம் யுகமாகப் பெருகி வந்த இலக்கியத்துறை நிச்சயமாகத் தூர்ந்தே போயிருக்கும்.

இக்காலத்திய பொதுமக்கள் ஒரு தனி யுகத்தின் சுற்றத்தில் வளர்ந்தவர்கள்; இந்தக் காலத்து அரசியல், சமூக முறைமை, தருமம், தனிப்பட்ட சுவை இன்னும் எத்தனையோ விஷயங்களில் ஊன்றி இருப்பவர்கள். இத்தகைய பொது மக்களை இலட்சிய மக்கள் என்று சொல்ல முடியாது. இன்று இவர்கள் யாசிக்கும் விஷயம் நூறு ஆண்டுக்குப் பிறகு நாடும் இலட்சியத்திற்கு நேர்மாறாகவே இருக்கும். இதைத் திடமாகச் சொல்லலாம். ஆனால் தற்காலத்துப் பொதுமக்கள் காதருகே வந்து உரத்த குரலிலேயே தூற்றவும் தூற்றுகிறார்கள்; போற்றவும் போற்றுகிறார்கள்.

இப்போழுது நிகழும் காலத்தின் குறுகிய எல்லைக்கு எதிரே இந்தத் தூற்றலும் போற்றலும் ஒரு வரவு செலவில்லை. பொதுமக்கள் என்போர் இன்று கண்சிவந்து எதைத் தூக்கி எறிகிறார்களோ வருங்காலத்தில் சத்தம் போட்டு அதையே உயர்வாகக் கருதுவர். இன்று கண்ணீர் துளிக்கத் துயர்மேலிட்டுக் கேட்கும் ஒரு விஷயம் மற்றொரு காலம், சிரிப்புக்கும் ஏளனத்திற்கும் பாத்திரமாகிவிடும். ஒரு சமயம் தாம் மனம் இளகி இருந்ததைக் கூட இந்தப் பொதுமக்கள் அடியோடு மறந்துவிடுவர்.

ஆங்கில வணிகர்களுடைய சாமான் கிடங்குகளின் இடையே கல்கத்தா நகரம் மெல்லத் தலை தூக்கியபொழுது கடைத் தெருச் சந்தடியில் ஒரு புதுவிதமான பொது மக்கள் தோன்றினர். "ஹுதோம்பேஞ்சார். நக்ஸா.(கோட்டானின் கூச்சல்) என்ற ஒப்பற்ற இலக்கியச் சித்திரத்தில் இவர்கள் நடமாடுகிறார்கள். தாசு ராய் எழுதிய பாஞ்சாலி இவர்கள் விருப்பத்தை நிறைவேற்றவே வகுத்த இலக்கியமாகும். நெற்பொரி படபடவென்று வறுபடுவது போல் வெறும் சொல்லடுக்கு நிரம்பியது அது.

"பாவோ ஸ்ரீகாந்த நரகாந்த காரீரே
நிதாந்த க்ருதாந்த, பயாந்த ஹபே பவே."

இதைக் கேட்டதும், "அடாடா" என்று மக்கள் கை தட்டுவார்கள். உற்சாகம் பிறந்து இரண்டு காதுகளையும் கையால் அழுத்திக்கொண்டு, தாரைக்குரலில் துரித தாளத்தில்,

"ஓரே விலக்ஷண ஏகீ அலக்ஷண
விபத் கடேசே விலக்ஷண

அதி அகண்ய காஜே, அதி ஜகன்ய ஸாஜே,
கோர அரண்ய மாஜே, கதோ காந்திலாம்"

என்று பாடிப் புலம்புவார்கள் கூத்தாடிகள்.

கடைத்தெரு மக்கள் இதைக் கேட்டு மகிழ்ந்து போலவராய் ஏதாவது சம்மானம் செய்வார்கள். ஓய்வு நேரம் தரும் அளவுக்குமீறிய செல்வத்தையும் மதிப்பையும் கண்டு அறியாத கிழக்கிந்தியக் கம்பெனியின் படைப்பான இவர்களை எங்ஙனம் இலட்சிய மக்களாகக் கொள்வது? இந்தப் பொதுமக்களே தாசுராயின் மேதையை, உலகப் பெரு மக்கள் கூடும் சபையில் வரவிடாமல் தடுத்துவிட்டார்கள். ஆனால் மைமன்சிங்கில் கிடைத்த அழகிய நாடோடிப் பாட்டோ உலக இலக்கியத்தில் இடம் பெறக்கூடியது. அது பட்டணத்து மக்கள் விரும்பும் சாதாரண வார்ப்படத்தில் உருவாகும் இலக்கியச் சரக்கன்று. அதை ஒரு கூட்டத்தில் பாடினால் கூடத் தனிப்பட்ட மக்களுக்கு என்றே, தனிப்பட்ட காலத்திற்கேன்றே உண்டானது போல் தோன்றுது. அதனுள் மண்ணின் மணத்தைக் காணலாம். இந்த மாதிரிப் பாட்டுக்களைக் கிழக்கு வங்க நாட்டினர் தாம் விளைவித்த பயிராகவே கருதினும், இவை உலகத்தவர் சுவைத்து இன்புறக்கூடிய பைங்கதிர்கள் ஆகும்.

கவியென்று நாம் கௌரவிக்கும் ஒருவனிடத்தில் உள்ள சிறப்பு என்னவென்றால், நாம் சொல்ல விரும்பு

வதையெல்லாம் அவன் ஒருவனே அழகாகச் சொல்லி முடிக்கிறான். ஆகவே, தன் விருப்பப்படி பேச நாம் அவனுக்குச் சுதந்திரம் கொடுத்தால், அவன் எல்லாருடைய பாவனைகளையும் தெளிவாக வெளிப்படுத்த மாட்டான். சந்தைக்கடை இரைச்சலிடையே பிறந்த இலக்கியம் அந்தக் காலத்துப் பொதுமக்களின் மனோபாவனைகளைப் பிரதிபலிக்கிறதென்பது உண்மை. அந்தக் காலத்தவர் நிலையைத்துச் சுவைத்தபோதிலும், அந்த இலக்கியம் நமக்குத் திருப்தி தருவதில்லை. இலக்கியத்தை உரைகல்லில் இட்டுத் தேய்த்தால், அதன் உயர்வும் தாழ்வும் வெளிப்பட்டு விடுகிறது. அற்புதமாகத் தோன்றும் ஓர் இலக்கியம் எண்ணில் ஒன்றேயானாலும், அது ஆயிரம் சாரமற்ற எழுத்துக்களுக்கு மேலாகவே நிற்கிறது.

கப்பலிலிருந்து நான் எழுதும் இந்தக் கடிதம் அதன் கடைசி வரிக்கு வந்துவிட்டது. விடைபெறுவதற்குள் உன்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்று எண்ணுகிறேன். ஏனெனில், கடிதம் எழுத வேண்டுமென்று உட்கார்ந்தேன். ஆனால் கட்டுரைதானே எழுதினேன்! இதிலிருந்து கடிதம் எழுதும் வயதைக் கடந்து விட்டேனோ என்ற திகில் ஏற்படுகிறது. அன்றாடம் ஊர்ந்து செல்லும் வாழ்க்கையில் மிதந்து வரும் விஷயங்களை வடிகட்டித் தரும் வன்மை எனக்கு இப்போதெல்லாம் குறைந்து வருகிறதுபோலும்! சுற்றுமுற்றும் போய்க்கொண்டே அக்கம் பக்கத்தில் காணும் காட்சிகளை உங்களுக்கு வருணிப்பது இனிமேல் எனக்கு எளிதன்று. ஒரு சமயம் இத்தகைய ஆற்றல் எனக்கு அளவு கடந்திருந்தது. பல பேருக்குப் பலவிதமான கடிதங்களை எழுதியிருக்கிறேன். அவை அந்த அந்தக் காலத்துச் சினிமாச் சித்திரங்கள் என்றே சொல்லலாம். அச்சமயம் மனத்திரையில் வெளியுலகின் நிழலும் ஒளியும் மாறி மாறி விழுந்துகொண்டிருந்தன. என் பழைய கடிதங்

களில் அதன் விசித்திரத்தைக் காணலாம். இப்பொழுது அந்த வெளியுலகின் சித்திரம் மங்கிப்போய் மனத்துள் பேச்சின் 'போனேகிராப்'பாக மாறிவிடுகிறது. இப்பொழு தெல்லாம் நான் காணும்விஷயமோ கொஞ்சம்; கேட்பதோ அதிகம்.

மனிதன் ஓர் இடத்திலும் ஒரே நிலையாக நிற்பதில்லை. அசையும் சினிமாப் படத்தைவிட வேறு எந்தப் படமும் அவனுக்குப் பிடிப்பதில்லை. நில்லாமல் மாறிக்கொண்டே போகும் நிகழ்ச்சியோடு கூடவே அவனுடைய நோக்கும் மாறிக்கொண்டு போகிறது. மிகவும் நெருங்கியவர்களே அவனிடம் இந்த மாறுதல் தோற்றுவதை விரும்புகிறார்கள். வெளிநாடுகளில் புதுப்புது விதமான மாறுதல்களும் நிகழ்ச்சிகளும் தோன்றும். இவற்றினிடையே புகுந்து கவனிக்கும் ஓர் அந்தரங்க நண்பனின் போக்கை அறிய ஆவல் கொள்வது எவருக்கும் இயல்பே. இத்தகைய ஆவலைத் தெரிவிப்பது கடிதமே.

ஆனால்,எந்தவிதமான எழுத்தோவியமும் இயல்பான ஆற்றலை எதிர்நோக்கியே இருக்கும் கடிதம் எழுதுவதும் அவ்வாறே. எங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர் சுநீதிகுமார். நான் அவரைப் பெரும் பண்டிதரென்றுதான் நினைத்திருந்தேன்;ஒன்றைஇரு கூறுகச்செய்யவும்இரண்டைஒன்ருக இணைக்கவும் அவர் கைப் பழக்கம் உடையவரென்று இதுகாறும் எண்ணியிருந்தேன். இப்போது பார்க்கையில் இடையருது,நிமிடத்திற்கு நிமிடம் மாறிக்கொண்டே ஓடும் இந்த உலகின் சித்திர விசித்திரங்களைச் சீர்கெடாமலும் துரிதமாகவும்,நிறைவுடனும் வருணிக்கும் ஆற்றல் அவருடைய எழுதுகோலுக்கு உண்டு என்று தெரிகிறது. இந்த ஆற்றலுக்கு அடிப்படையாக உள்ளது, உலக நடவடிக்கைகளில் அவருக்கு இருக்கும் ஆர்வமே. இழிந்ததென்று எதையும் ஒதுக்காதவர் அவர். மேல் எழுந்தவாரியாக எதையும் விவரிக்கமாட்டார். மொழியின் நுட்பங்களை

ஆராய்வதில் மூழ்கி இருப்பவர்களுக்கு எளிதில் சித்திர மொழி எழுத வராது. ஏனெனில், இந்தச் சித்திரம் மேலே தான் தென்படும். ஆனால் சுநீதிகுமாரரின் ஆழ்ந்த அறிவு மேலே மிதக்கும் சித்திரம் போன்ற சொற்களை மூழ்க்காததுதான் வியப்பிலும் வியப்பு. சுநீதிகுமாரரின் ஒப்பற்ற இந்தக் கடிதங்களை நின்று நிதானமாய்ப் படித்துப் பாருங்கள். இவை சிறந்த கடிதங்களென்பது தெரியவரும். இவை எத்திசையும் கொற்றக்குடை நிழற்றுவது போன்ற தன்மை வாய்ந்தவை. இவற்றுள் சிறிய விஷயங்களும் பெரிய விஷயங்களும் ஒரே நிலையில் இடம் பெறுகின்றன. சுநீதிகுமாரருக்குப் பட்டம் சூட்ட வேண்டும்; லிபி-வாசஸ்பதியா, லிபி-சார்வபௌமரா, அல்லது லிபி-சக்கரவர்த்தியா, எது சிறந்த பட்டம்? எதிரே கடலில் அரைமதி வட்டமான கரைப்பகுதி தெரிகிறது. வெகு தொலைவுவரை ஆழமே இல்லை. நீர்ச்செம்மண்ணின் சாயம், மாநிலத்தின் காவிநிற மேலாடைபோல் பெருகியிருந்தது. அலையே இல்லை; நாள் முழுவதும் நீர்க்குவை மெல்ல ஏறுவதும் இறங்குவதுமான காட்சியே. தேவமாது ஒருத்தி ஓசைப்படாமல் பின்புறமாக வந்து நிலமடந்தையின் கண்ணைப் பொத்திப் பொன்னார் மெல்லிய முறுவல் செய்தாள். எதிரிலும், இடதுபுறமும் ஒரு வரிசைத் தென்னை மரங்கள் ஓங்கி நிற்கமுடியாமல் ஒன்றையொன்று தழுவிக்கொண்டிருந்தன. அசைந்தாடும் அவற்றின் ஓலைமீது சூரியகிரணம், சிறு பிள்ளைகள் ஆற்றுநீரை வாரி ஒருவர் மேல் ஒருவர் வீசிக்கொள்வது போல் விழுந்து சிதறியது. இளங்காலையில் வானிடைக் கதிரினம் குளித்து விளையாடின.

## 5

நான் இறங்கிய இடம் சீனச் சீமான் ஒருவன் வீடு. நாங்கள் அவனுடைய விருந்தினராக இருந்தோம். விசால

மான வராந்தாவில் பிரம்பாலான சாய்வு நாற்காலியில் அமர்ந்திருக்கிறேன். கடல் இருக்கும் திசையிலிருந்து குபு குபுவென்று காற்று வீசுகிறது. வானத்தின் மூலைமுடுக்கு களில் மேகங்கள் தனித்தனியே பிரிந்து, இருண்ட போர்க் கோலத்தைக் களைந்துவிட்டன. அவை கொஞ்ச நாள்வரை யிற் கதிரவனோடு நட்புக் கொண்டாடுமென்று எண்ணு கிறேன். அந்தப் பக்கமாக ஓர் அறையில் தீரேந்திரன் 'எஸ்ராஜ்' என்ற இசைக்கருவியில் ஈடுபட்டு இராகங்களை இழைத்துக்கொண் டிருந்தான். பைரவத்திலிருந்து ராம கேளிக்கும் ராமகேளியிலிருந்து பைரவிக்கும் சஞ்சாரம் செய்தான். நோக்கின்றித் திரியும் மேகம்போல் மனம் போனபோக்கில் இராகங்கள் உரு மாறிக்கொண்டே போயின.

இன்று காலையில் என் மனநிலை ஓதம் அடங்கிய கடல் போல் இருக்கிறது. நாட்டம் எல்லாம் கரைப்பக்கமே. எந்தத் திசை என்று சொல்வதற்கில்லை. தளிர்களின் பசுந்தண்ணிழலில் பதுங்கி வெயில்நேரத்தைக் கடத்தும் இச்சிறு தீவை ஒத்து, உள்ளத்துள் ஒரு நிறைவைப் பெற்றுத் தென்புடன் இருக்கிறேன்.

மனத்துள் திகழும் இந்த அநுபவச்செறிவை ஆனந்த மெனக் கூறலாம். உலகிடை நான் உணர்வு பெற்றிருப்ப தனால் வரும் உவகை, உருவம், நிறம், வெளிச்சம், ஒலி, ஓய்வு எல்லாம் ஒன்றாக இழையும் ஒரு பரிபூரணபோதம், என் மனக்கதவைத் தட்டி, "நான் இருக்கிறேன்" என்று அறிவிக்கிறது. என்னுடைய சித்தம் அத்தகைய ஆனந்த வாழ்வில் வழிந்து ஓடுகிறது; கடலின் பொங்கொலிபோல் 'ஓம்' என்ற சுருதியில், "நான் இருக்கிறேன்" என்று ஒலிக் கிறது. அகண்டாகாரமான வெறும் பாழ், குகைபோல் ஆவென்று வாயைத் திறந்துகொண் டிருக்கிறது. அதன் எதிரே அந்தத் தென்னமரம், தன் ஓலையிறகை அசைத்து, "இதோ இருக்கிறேன்" என்கிறது. பிராணசக்தி காட்டும்

இந்தத் துணிவு என் மனத்திடைப் பெரு வியப்பை மூட்டு
கிறது. நீரேந்திரன் அதே பைரவ ராகத்தைக் கமகத்து
டன் வாசிப்பதும் அந்தப் பேருருவான பிராணனின்
குரலே; எல்லையற்ற பாழின் நடுவே அது தன் இசைக்
கொடியைத் தூக்குகிறது எனலாம்.

அதுவே படைப்பின் இரகசியமாகும் இதனுடன் எல்
லாம் முடிந்துவிடவில்லை; 'செயல்' அதனுடன் இணைந்
திருக்கிறது. உள்ளுக்குள் கடல் ஒலி அடங்கி இருக்கிறது.
ஆனால் அதன்மீது அலையின் பேர்இரைச்சல் பொங்கு
வதும் சுருங்குவதுமான அசைவைக் கண்டேன். வாழ்க்
கையில் செயலுக்கு ஓர் ஓய்ச்சல் இல்லை. இந்தச் செயலுக்
குத்தான் எவ்வளவு முயற்சி வேண்டியிருக்கிறது!
எத்தனை கருவிகள் தேவை! எவ்வளவு பாழ்! பொருள்
கள் குவியக் குவியப் பிராணனுக்கு அடைப்பு ஏற்படு
கிறது. புறத்தே அனைவர்க்கும் பொதுவான இடத்தைக்
கவர்ந்து உள்ளத்தே நிறைவான அநுபவத்தைத் துண்டு
துண்டாக்குகிறது. அகம்மதையின் தூண்டுதலினால் செய
லானது திமிருடன், தான் வளர்ந்து பெருகுவதையே
குறியாகக் கொள்கிறது. இருக்கவேண்டிய அளவைமீறிப்
பெருக்க விரும்புகிறது. இதனால் தளர்ச்சியும் அமைதி
யின்மையும் பொய்ம்மையுந்தான் விளையும். உலகத்தை
உருவாக்கிய விசுவகருமனின் குழலில் ஒலிக்கும் அந்த
ஓய்வின் இசை இக்காரணம்பற்றியே என் செவியில் புக
வில்லை. இந்த ஓய்வின் இசையின் இலயத்தில்தான்
படைப்பு வேலையும் நடக்கிறது. இந்த இன்னிசை இன்று
காலை ஒளியுடன் கலந்து தென்னமரத்தின் கீற்றோலையில்
சுருதி மீட்டியது. அந்த இடத்தில் சக்தியின் உருவமும்
முக்தி (விடுதலை)யின் உருவமும் இரண்டறக் கலந்து ஒன்
றெனத் திகழும் அற்புதம் கண்டேன். வாழ்வில் இதன்
மூலமே அமைதியும் அழகும் தோன்றும். இந்த ஐக்கி
யத்தைத்தான்- நீடித்து ஓடும் 'செயல்' என்னும் பேராறு

'படைப்பு' என்னும் ஆழாழியில் கலந்துபோகும் இக காட்சி யைத்தான் - நான் தேடுகிறேன். இந்த உண்மையைத் தான் கீதை, "வினை செய், பயனை எதிர்பாராதே" என கிறது. பயனை எதிர்நோக்கும் பெருநசையே இராகுவைப் போல் வினையின் வயத்திலிருந்து இன்னமுதை விழுங்க அலைபாய்கிறது. புறத்தில் நடக்கும் வினையின் இயல் பினால் உள்ளத்தில் நிகழும் பிராணனின் இயற்கை ம லைடைகிறது. உள்ளத்தில் உண்டாகும் இந்தப் பயனை விடப் புறத்தைச் சேர்ந்த தன்னலம் ஒன்றுமாயின வினை கொடுந்தினை ஆகிவிடுகிறது. அழுக்காறு, பகைமை, பிறரை ஏமாற்றுதல், தன்னையே வஞ்சித்துக்கொள்ளுதல் போன்ற நிலை யாவும் இந்தக் கொடுந்தினையின் விளைவு களே. இதனால் துயரும் அவமானமும் பொறுக்க முடி யாத அளவிற்கு நேரும். அப்போது, "எப்படியேனும் போகட்டும், இந்த வேலை; எங்கேனும் ஒழிந்து போகிறேன்" என்று அலுத்துச் சலித்தவனாய் ஆற்றுகிறான் மனிதன். அச்சமயம் அவனுக்கு, "வினையை விட்டு உன்னால் விலகிச் செல்லமுடியாது. வினையே உயிர். தன்னுள் அடக்கியிருக்கும் பெருண்மையின் மூலமாகத்தான் வினை பயனடைகிறது; வெளிப்பயனை நுகர்வதனால் அன்று. அதுவே விடுதலைக்கு வழி" என்று அழைப்பு வருகிறது.

பயனை விரும்பிச் செய்யும் தொழிலே உழைப்பு. அந்த உழைப்பிற்குக் கருத்தா நாமாகவோ இருக்கலாம்; பிறராக வோ இருக்கலாம். இதுபோல் உழைப்பது சம்பளத்திற் காகத்தான்; இது வேலைக்காகவே செய்யும் வேலை ஆகாது. தொழிலினுள் மண்டிக் கிடக்கும் இனிமையை உணராமல், ஊதியமே கண்ணாக, வெளி உலகு மெச்ச வேலை செய்வது மனிதனுடைய தன்மைக்கே ஓர் இழுக்காகும். உலகத்துக் காகவா நாம் உண்கிறோம்? உயிர் பிழைத்து இருப்பதற் குத்தானே! இதனால்தான் பிறர்வாயிலில் நின்று மனிதன் யாசிக்கவேண்டி இருக்கிறது. இந்த நிலையில் தத்துவ

ஞானி ஒருவன் என்ன சிந்தனை செய்கிறான் தெரியுமா? தொழிலில் தென்படும் பளு எவ்வாறு ஒழியுமென்றுதான்! எதற்கும் அடங்காத மனிதன், "குறைவாக உண்பேன்; குறைவாக உடுப்பேன். மழை, வெயில் இரண்டையும் ஒன்றாகக் கருதுவேன். அடிமை மனப்பான்மை விடுபடுவதற்கு இயற்கை எந்த முறையைக் கையாண்டாலும் அதை ஒதுக்கி விலகியே செல்வேன்" என்கிறான். அப்போதுதான் கடினம் போய்த் தொழில் இலேசாகிவிடும். ஆனால் இயற்கை நமக்கு விதிக்கும் தொழிலில் இம்சை இருப்பதுடன், இன்பச் சுவையும் நிரம்பி இருக்கிறது. ஒரு புறம் அது பசியை உண்டாக்குவதன் மூலம் ஆகாரம் தருகிறது; மறுபுறம் சுவை என்ற உணர்வாக நாவுக்கு இன்பம் தருகிறது. இயற்கை ஒரே சமயத்தில் நமக்குப் பசித்தை மூட்டியும், நம் ஆசையைக் கிளப்பியும் தன் வேலையை நடத்திக்கொள்கிறது. இந்த ஆசையிலிருந்து அநுபவிக்க வேண்டுமென்ற விருப்பம் பிறக்கிறது. புரட்சியின் வித்தான மனிதன், "இந்த விருப்பம் இயற்கை விரிக்கும் சூழ்ச்சி. இதுதான் மோகம். இதை விட்டுத் தொலைக்கவேண்டும். துறவுதான் சரியான வழி. துயருக்குக் கீழ்ப்படியேன்; இன்பத்தையும் வேண்டேன்" என்கிறான்.

ஏழெட்டுப்பேர் இப்படி வெறுத்துப் போய் வீடு வாசலைத் துறந்து காட்டில் கந்த மூலங்களையே புசித்துக் கொண்டு மௌனியாக இருக்கலாம். ஆனால் எல்லாரும் இந்தப் பாதையிலேயே சென்றால் துறவறத்திற்காகப் பெரும் போரே நேரும். மரவுரியே கிடைப்பது அரிதாகிவிடும். குகைகளில் வசிக்க இடம் இராது. கனியும் கிழங்கும் எல்லாருக்கும் பற்றாது போய்விடும். அந்த நெருக்கடியில் கோவணம் உடுத்த வைராகிகள் துப்பாக்கியால் ஒருவரை யொருவர் சுட்டு வீழ்த்திக்கொள்வர்.

மனித வாழ்க்கையின் புதிர் எப்பொழுதும் ஏதாவது தொழிலில் ஈடுபட்டிருப்பதுதான்! உயிர் வாழ்வதற்கு இது மிக அவசியமாக இருக்கலாம். ஆனால் இந்த நோக்கத்தையே தொழிலின் முழு உத்தேசமாகக் கொள்ளாமல், இதைக் கூடியவரையில் அடக்கிக்கொண்டு எப்படி இலகுவாக்குவது என்பதுதான் கேள்வி. அதாவது, பிறருக்குப் பணி ஆற்றுவதோடு நில்லாமல் சுய சொந்தப் பொறுப்பில் அந்தத் தொழில் ஓங்கி இருப்பது எங்ஙனம்? பொறுப்பற்றுச் செய்யும் தொழில் கூலிக்கு மாரடிப்பதுபோலத்தான். அது மனிதனை அழித்தே தீரும். அந்த மாதிரி அடிமைத்தனத்திலிருந்து மனிதனைக் கரையேற்றவேண்டியது அவசியம்.

எனக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வருகிறது. முன்பே ஷில்லங் சென்றிருந்த சமயம் ஓவியர் நந்தலால் கர்சியாங்கிலிருந்து ஒரு கார்டில் படம் அனுப்பியிருந்தார். ஒரு தட்டான்; அவனைச் சுற்றி அவன் குழந்தைகள் விளையாடிக்கொண்டிருக்கின்றன. கண்ணாடி போட்டுக்கொண்டு அவன் நகை செய்துகொண்டிருக்கிறான். இந்தப் படம் ஒரு விஷயத்தை விளக்கியது. அவன் செய்யும் வேலைக்கு வெளியிலிருந்து ஊதியம் கிடைக்கிறது. அவன் உள்ளத்திலிருந்து அது ஆதரவைப் பெறுகிறது. அந்தத் தொழிலின் மூலம் தட்டான் வயிற்றுக்கில்லாக் குறையை வெளிப்படுத்துவதோடு தன் உள்ளத்தின் நிறைவையும் காட்டுகிறான். தன் கைத்திறமையுடன், ஊக்கத்தையும் உருவாக்குகிறான். முதலாவது அந்த வேலை அவனுடைய சொந்த விஷயம்; விலை கொடுத்து வாங்குபவனை அது சாருமென்பதை இரண்டாம் பட்சமாகத்தான் கொள்ள வேண்டும். இந்த வழியில் பயனை எதிர்பார்க்கும் ஒரு நவை தொலைந்து தொழில் இலேசாகி விடுகிறது. அதற்கான மதிப்புடன் மதிக்க ஒன்றுந்தோன்றும் அதற்குக் கிட்டுகிறது. இதனால் தொழிலின்கண் உள்ள இழிவு

அடியோடு ஒழிகிறது. ஒரு காலத்தில் வணிகன் எல்லார் இகழ்ச்சிக்கும் ஆளானவன். ஏனென்றால், அவன் விற்பனை செய்வானே தவிரக் கொடுக்கமாட்டான். ஆனால் தட்டான் செய்யும் நகைவேலையில் ஒரே சமயத்தில் விற்பனையும் கொடையும் கலந்திருக்கின்றன. அவன் தன் உள்ளத்திலிருந்து கொடுக்கிறான்; வெளியிலிருந்து அதற்கு உகந்ததைப் பெறுகிறான்.

வேலையாள் ஒருவனை அமர்த்திக்கொள்கிறோம். எஜமானரான நாம் அன்பு காட்டாமல் ஒதுங்கியே நின்றால், அவனுடைய மனிதத்தன்மை குன்றிவிடுகிறது. அவன் வெறும் அடிமையாக ஆகிவிடுகிறான். நாம் வேலை இடவேண்டியது; அவன் கடமை அதைச் செய்யவேண்டியது என்ற தொனியில் இறுமாப்பு, ஆற்றாமை இரண்டும் கலந்துள்ளன. இவற்றுக்கு இடம் கொடுக்காமல் மனிதனுக்குரிய கௌரவத்தை உணரும் சமூகத்தில் வேலைக்காரனுக்கும் நெருங்கிய உறவினனுக்கும் இடையே உள்ள வேற்றுமை மறைந்துவிடுகிறது. அண்ணன், சிற்றப்பன், மாமன் இவர்களைப்போல் வேலையாளும் நமக்கு நெருங்கிய உறவினன் ஆகிவிடுகிறான். அப்பொழுது அவன் பிறர்க்கு வேலை செய்வதாக எண்ணாமல் தன் சொந்த அலுவலென்றே அதைக் கருதி நடந்து வருகிறான். பலனை எதிர்பார்க்கும் ஓர் இழிவுத் தன்மை அற்றுப் போகிறது. அவன் உழைப்பிற்கு ஏற்ற கூலியும் கிடைப்பதென்னவோ உண்மை. ஆனால் விருப்புடன் வேலை செய்வதன் மூலம் தானம் வழங்குகிறான்; விற்கவில்லை.

குஜராத்திலும் காடியாவாடிலும் மக்கள் பசுவைத் தம் இன்னுயிர் போல் அன்பாக வளர்க்கிறார்கள். பாலை விற்கும் தொழிலின்கண் உள்ள ஈனத்தை, இந்த அன்பினால் போக்கிக்கொள்கிறார்கள். தொழில் செய்வதன் மூலமாகவே தொழில் தொல்லையிலிருந்து விடுபட முடியும். இந்த மக்கள் இழிகுலத்தோரல்லர். பாலைக் கறந்து

கொள்வதற்காகப் பசுவை வளர்த்து, அது மரத்தவுடன் அதைக் கசாப்புக்காரனிடம் ஒட்டும் மனிதன் எவனாக இருந்தாலும் அவன் இழிந்தவனே. அந்தத் தொழிலே அவனுக்குப் பெருந்தளை ஆகிறது. உள்ளத்தில் விடுதலை காணாமல், அன்பின் ஊற்று வற்றி இலாபமே குடிகொண்ட வேலை மிகவும் கீழ்த்தரமானது. பெரும்பாலும் இத்தகைய சனர்களே இன்று உலகத்தில் பெரிய பதவியை வகிக்கின்றனர். இவர்களிற் சிலர், கல்விகற்ற நிபுணர்கள்; சிலர் அரசு செலுத்தும் அதிகாரிகள்; சிலர் சமய குரவர்கள். வீட்டு வேலைக்காரி, தாதி, தோட்டக்காரன், குயவன், உழவாளி ஆகிய எத்தனைபேரோ தாழ்ந்த நிலையில் இருந்தாலும் முன்சொன்னவர்களைப்போல் ஈனப் பிறவிகள் அல்லர். வெயில் படரும் கடற்கரை ஓரம், தென்னங் கீற்றின் சலசலப்பில், இன்று எளிய மாந்தரது வாழ்க்கையிசையின் இன்னொலி கேட்கிறது.

இப்பொழுதே இருநூறு மைல் தொலைவில் உள்ள ஓரிடத்திற்குக் கிளம்பிப் போக வேண்டும். மூட்டை முடிச்செல்லாம் கட்டி முடித்து, உடுப்புப் போட்டுக்கொண்டு எல்லாரும் காத்துக்கொண் டிருக்கிறார்கள். அவர்களைப் போல் விரைவாக என்னால் புறப்பட முடியவில்லை. வண்டியைப் பிடிக்க மோட்டாரில் ஏறிக்கொள்ள வேண்டும். வாயிலிலோ மோட்டார் சற்று நேரத்துக்கொருதரம் 'ஹார்ன்' ஊதிக்கொண் டிருந்தது. நான் விரைவில் கிளம்பவில்லையே என்று பொறுமையை இழந்து, என்னுடன் வரும் நண்பர்களுக்குப் பரபரப்பு. ஆனால் அதை வெளிப்படுத்த அவர்கள் குரலில் வலிமை இல்லை. புறப்பட்டுவிட்டேன். தென்னை மரங்களின் பசுமையான ஓலைகள் மீது வெயில் சிதறிக்கொண் டிருந்தது. அவை காற்றில் ஓயாமல் அசைந்தாடின. அருகிலேயே கடல் தன் மொழியில் ஓயாமல் எதோ உரைத்துக்கொண்டே இருந்தது.

# 7

கியானயார் அரசமாளிகை வந்தடைந்தோம். பகல் உணவருந்துவதற்கு முன்னால் சுநீதிகுமாரர், அரச பரிவாரத்தைச் சேர்ந்த புரோகிதரைக் கண்டு அளவளாவத் தொடங்கிவிட்டார். சாப்பிடும்பொழுது அரசர் சமஸ்கிருதத்தில் ஏதாவது என்னைச் சொல்லும்படி கேட்டார். இரண்டு மூன்று சுலோகங்கள் சொன்னேன். சுநீதிகுமாரர் அதில் ஒரு சுலோகத்தைப்பற்றி விளக்கும்பொழுது அது, "சார்தூல விக்கிரீடிதச் சந்தம்" என்றவுடன் அரசர் அந்தப் பெயரை உச்சரித்துத் தமக்கும் அது தெரியுமென்பதைக் காட்டிக்கொண்டார். இந்தப் பக்கத்து அரசர் ஒருவர் வாயிலிருந்து கடகடவென்று வடசொல் வருவதைக் கேட்டு நான் திகைத்துப்போனேன் அதற்குமேல் அரசர் ஒவ்வொன்றாக எடுத்தார்: சிகரிணி, சிரக்தரா, மாலினி, வசந்ததிலகம். இன்னும் வடமொழி யாப்பு அணி இலக்கணங்களில் தென்படாத புதுப்புதுச் சந்தங்களின் பெயர்கள் யாவும் சொன்னார். இவை அவர்கள் மொழியில் வழங்குவனவாம். ஆனால் 'மந்தாக்ராந்தா,' 'அநுஷ்டுப்' இந்த இரண்டும் அவர்களுக்குத் தெரியாவாம். பாரதநாட்டின் கல்விச் செல்வம் இங்கே சிதைந்து உருமாறி இருப்பதை நோக்கும்பொழுது, அது ஒரு பூகம்பத்தில் பழமையான நகரம் இடிந்து மண்ணில் மறைந்துபோய், அந்த இடத்தில் பிற்காலத்திய வீடுவாயில்கள் தலைதூக்கி நிற்கும் காட்சிபோல் இருந்தது. சில இடங்களில் பழைய கீர்த்தியின் சின்னங்களும் இன்றைய நாகரிகமும் கலந்தே உருவானது இந்நாட்டினர் வாழ்வு.

இங்கே இப்போது உள்ள பழைய பாரத நாட்டுச் சின்னங்களைக் கொண்டு, அந்தக் கால நிலையை ஒருவாறு ஊகிக்கலாம். இங்கே இந்து தருமம் சைவமாகவே பரவியிருந்தது. துர்க்கையைக் காணலாம். கபால மாலை



கல்லில் நடனம்

இராவணன் சீதையைக் களவாடுதல்

(போரோபுதூர் சிற்பம்)

அணிந்து நாக்கை நீட்டிக்கொண்டு, பிறந்த மேனியாக இருக்கும் காளியைக் காண இயலாது. இவர்கள் எந்தத் தேவதைக்கும் மிருக பலி கொடுப்பதில்லை.

இவர்கள் நாட்டில் காணும் இராமாயண மகாபாரத வரலாறுகளை நம நாட்டு நூல்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் எவ்வளவோ வேற்றுமை காணலாம். முக்கியமாக, பாட பேதத்தில்தான். சம்ஸ்கிருதத்திற்குப் பதிலாக அவைகளில் போலிச் சொற்களே மலிந்து கிடக்கின்றன. இவர்களது இராமாயணத்தில் இராமனும் சீதையும் அண்ணன் தங்கையர், அண்ணனுக்கும் தங்கைக்கும் கடிமணம் ஆகியது. உலாந்தா நாட்டுப் பண்டிதர் ஒருவரை இதுபற்றிக் கேட்டபோது அவர், "இந்த வரலாறே பழமையானது. பிற்காலத்தினர் இதை அடியோடு மறைத்துவிட்டார்கள்" என்று தம் கருத்தை வெளியிட்டார்.

இதை உண்மை என்று கருதுவோமானால், இராமாயணத்திற்கும் மகாபாரதத்திற்கும் உள்ள ஒற்றுமை நன்கு புலப்படும். இரண்டு கதைக்கும் மூலக் கருத்தாக இருப்பவை இரண்டுவகை விவாகங்கள். இவ்விரு மணமுறையும் ஆரியரீதியைப் பின்பற்றுவனவல்ல; அண்ணன் தங்கையை மணம் செய்துகொள்வது பௌத்த வரலாறுகளிற் சில இடங்களில் வருவதாக அறிகிறோம். இருந்தாலும், அது நம மரபிற்கே முற்றும் நேர்மாறானது. ஒரு பெண்ணை ஐந்து சகோதரர்கள் மணம் புரிவது அதிசயமாகத்தான் இருக்கிறது. இதற்குச் சாஸ்திரம் இடங் கொடுக்கவில்லை. இரண்டாவது ஒற்றுமை எங்கே என்றால், இந்த இரு விவாகங்களும் நிறைவேறுவதற்காக அஸ்திர பரீட்சை நடத்தும் படலத்தில்தான். மூன்றாவது ஒற்றுமை: பெண்களிருவரும் மனிதவயிற்றில் பிறந்தவரல்லர்; சீதை மண்ணின் மகள். ஏர் உழும்பொழுது சிக்கியவள். திரௌபதியோ யாக குண்டத்தி

நடத்தினரோ, அந்தக் கண்ணனே. நீண்டநாள் சீதாராமர் கள் சுற்றித் திரிந்த காடு-அரக்கரின் இருப்பிடம்-பாஞ்சாலி யுடன் பாண்டவர்கள் உலவிய ஆரணியம் - முனிவரின் தபோவனம். பாண்டவர்களுக்குத் தொண்டாற்றவே பாஞ் சாலி வனவாசத்தை மேற்கொண்டாள். ஒன்றும் கிடைக் காத அந்தக் காட்டில் விருந்தினருக்கு அட்சய பாத்திரத் திலிருந்து அன்னம் படைத்தாள். பாரத பூமியில் நெடு நாளாக, வனத்திற்கும் வயலுக்கும் இடையே மாளாப் போர் நடந்துவந்தது. மற்றொரு போர், வேத தருமத் திற்கும் கண்ணன் காட்டிய தருமத்திறகுமிடையே நிகழ்ந் தது. குருக்ஷேத்திரம் கண்ணனுக்குப் பகைவரான கௌர வர்களின் இடம். கண்ணனை வழிபடும் பாண்டவர்களுக்கு அவ்விடத்தில்தான் வெற்றி. சரித்திர உண்மையை அலசிப் பார்த்தால்வெளிக்கு இந்தமாதிரிப் போர்கள் உணவுப் பிரச்சினையை அடிப்படையாகக்கொண்டனவாய் இருக்கின் றன. உள்ளே புகுந்து பார்த்தால் அவை புதிய தத்துவத் தைப்பற்றியனவாக இருக்கும். ஜனத்தொகை காலப்போக் கில் மிகுதியாகிறது. எல்லாருக்கும் உணவு போதவில்லை. ஆகவே, காடுகளை அழித்துப் புதுநிலங்களைப் பண்செய்ய வேண்டிவருகிறது. மனிதனின் மனமும் நாளுக்கு நாள் வளர் கிறது. பழையன கழிந்து புதியன புகுதலாலே குறுகிய பழமையைப் பற்றுவோருக்கு விரிவும் ஆழமும் உடைய புதிய கருத்துக்கள் பிடிப்பதில்லை. அதனாலேயே சச்சரவு மூள்கிறது. ஒரு சமயம் இந்த இரண்டு கட்சியாருக்கும் தீராப்பகை மூண்டிருந்தது. ஒரு கட்சியார், 'வேதமந்திரமே பிரம்மம்' என்றனர். மறு கட்சியார், 'பிரம்மமே பரம்பொருள்' என்றனர். இராமாயணத்திலும் மகாபாரதத்திலும் பல உபகதைகளாக உருவு கொண்டிருக்கும் பாரத நாட்டின் உண்மையான வரலாறு இங்கே வழங்கும் பாடபேதங்களை நன்கு ஒப்பு நோக்கிய பின்பே தெற்றென விளங்கும். பேச்சோடு பேச்சாக ஒரு சமயம் இங்கே ஒருவர், "துரோ

னன் பீமனைச் சூழ்ச்சியில் கொன்றுவிடவேண்டி அவனைச் சாதிக்க முடியாத ஒரு வேலை செய்யும்படி அனுப்பினான். துருபதனின் எதிரியான துரோணன் பாண்டவர் பக்கமாக இல்லை என்பதற்கு இவர்களது மகாபாரதத்தில் பல சான்றுகள் கிடைக்கும்'' என்றார்.

இராமாயணக் கதையைப்பற்றி இன்னும் ஒரு விஷயமும் உண்டு. அதை இங்கே சொல்லி விடுகிறேன்: விளைநிலங்கள் இரண்டு விதமாகப் பாழடையக் கூடும். ஒன்று, வெளியிலிருந்து எவரேனும் செய்யும் அட்டூழியம்; மற்றொன்று, அதை நாமே அலட்சியம் செய்வது. இராவணன் சீதையை எடுத்துக்கொண்டு போகும்பொழுது இராமனும் சீதையும் மீண்டும் ஒன்றுகூடுவதற்கு வழி இருந்தது. பின்னால் இராமனுடைய அலட்சியத்தினால் சீதை அவனுடைய ஆதரவிலிருந்து பிரிந்தபொழுது மாநிலத்தின் மகளான அவள் தன் தாயின் மடியிலேயே மறைந்து போனாள். நாடுகடத்தப்பட்ட சீதையின் கருவில் உண்டான இரட்டையர்கள் தாம் இலவ குசர்கள். 'லவ' என்ற பகுதிச் சொல் 'களைதல்' என்று பொருள்படும். 'குச' என்பதன் பொருள் புல். களைய புல் பயிரை ஓங்கவிடாதென்பது எல்லாருக்கும் தெரிந்ததே. இதில் ஏதேனும் உண்மை இருக்குமாயின் 'லவ குச' என இரண்டு சொற்களும் சேர்ந்து வருவதன் கருத்து என்னவாயிருக்கும் என்றுதான் படித்தவர்களைக் கேட்கவிரும்புகிறேன்.

மற்றவர்களின் கடிதங்களிலிருந்து உனக்கு மற்ற விவரம் எட்டியிருக்கலாம். இங்கே ஒரு பெரிய ஈமக்கிரியை நடக்கப்போகிறது. அதைப் பார்க்கவே நாங்கள் வந்தோம். ஏறக்குறையச் சீனர்கள் செய்வதுபோலத்தான் கடைசிச் சடங்குகளை மிகவும் ஆர்ப்பாட்டமாக இசைக் கருவிகள் முழக்கிப் பணச்செலவு செய்து நடத்துகிறார்கள். மந்திரம் உச்சரிப்பதுமட்டும் இந்துக்களிடம் கடன் வாங்கினார்கள் போலும்! சவத்தைக் கொளுத்துவதும் இந்து வழக்

முஸ்லிம்களுக்கு நாம் தோற்றவரே. ஒரு முஸ்லிம் வேறொரு முஸ்லிமைச் சந்தித்த மாத்திரம் உள்ளம் கலந்து பழகுவான். ஓர் இடத்திற்கு வந்தவுடன் அவ்வூர் மக்களைப் பலத்தினாலோ, சாமர்த்தியத்தினாலோ மேன்மைக் குணத்தினாலோ தன் இனத்தவர்களாக ஆக்கிக்கொள்வதில்லை. கொள்வினை, கொடுப்பினை செய்து சந்ததியை உண்டு பண்ணிவிடுகிறான். தன் மதம் நிலைப்பதற்கான வழியைத் தேடுகிறான். எவரோடும் விவாக உறவு வைத்துக்கொள்ள அவனுக்கு இடையூறு எதுவும் இல்லை. இந்த மனோ முறைப்படி தன் சமூகத்தின் வன்மையை எந்த இடத்திலும் அவன் பரவச் செய்ய முடியும். இரத்தப் பெருக்கினால் மட்டுமல்ல; இரத்தக் கலப்பின் மூலமாகவும் தன் ஆதிக்கத்தை விரிவாக்க முயலுவான் முஸ்லிம். இந்து மக்கள் மட்டும் இவ்வாறு செய்வாரேயாயின் பலித்தீனில் இந்து தருமம் நிலைத்தும் இருக்கும்; கலப்பற்றதாகவும் இருக்கும்; அதில் மக்கள் ஆழமாக ஊறியும் இருப்பார்கள்.



சந்தடி, அலைச்சல்; நிறை இடமில்லாமல் சுற்றித் திரிதல் எங்கேனும் சொற்பொழிவாற்றுதல், எவரேனும் அழைத்தால் போதல், விருந்துண்ணுதல் இவைகளுக்கிடையே சமயம் வாய்க்கும்போது இரண்டு வரி ஏதாவது எழுதுகிறேன். சிந்தனையின் ஓட்டம் தூர்ந்துவிடுகிறது, ஏனெனில் கடமையைச் செலுத்தும் அறிவு மேலெழுந்து செல்கிறது: உயர்ந்த மனோபாவங்களைத் தடுத்துவிடுகிறது. பறவை பறப்பதற்கும் பட்டம் பறப்பதற்கும் வேறுபாடு இல்லையா? கடிதம் எழுதுவதாக எண்ணி நான் ஏதோ சில வரிகளைக் காற்றாடிபோல் பறக்கவிடுகிறேன். கடமை என்ற கொம்பில் மாட்டிவிட்டு மனம் போன போக்கில் நூல் நிறைய விட முடிவதில்லை.

உடல் மிகவும் களைத்திருக்கிறது. ஒரே ஊரில் புதுப் புது இடங்களைப் பார்வையிடப் போதல், அங்கே வரவேற்பு, ஜனங்கள் மகிழ்வதற்காக இரண்டு வார்த்தை பேசுதல், இப்படிப் பல அலுவல்கள். கீதையின் உபதேசத்தின்படி நான் பயனை எதிர்பாராமல் இருப்பேனாயின் என் வாழ்க்கைப் படகு பாய்விரித்து ஒரு கரையிலிருந்து மற்றொரு கரைக்கு ஆடி அசைந்து கொண்டல்லவோ செல்லும்! இங்கே என் வாழ்வு போராட்டத்தை எதிர்த்துச் செல்லுகிறது. படகைத் தாம்பினால் இழுத்துச் செல்லவேண்டியிருக்கிறது. கழியை ஊன்றித் தள்ளியும் துடுப்பை ஓயாமல் போட்டும், மூச்சுப் பிதுங்க வேலை செய்யவேண்டி வருகிறது. சாவகாசமாய் என் விருப்பம்போல் நான் உலகைச் சுற்றிப் பார்ப்பேன் என்ற நம்பிக்கை யாவும் வீணே. வழியோ நீள்கிறது; நிறையத்தான் பொருள் கிடைக்கிறது. ஆனால் செலவு அதிகமாகிறது. நாக்கை அசைக்கும்போதுதான் இங்கே என் கால் அசையும். நினைத்தபொழுது கண்ட

இடத்திலும் நான் பேசவேண்டி வரும். நானும் இயைந்து அமெரிக்காவில் அவல் தயாரிக்கும் இயந்திரங்களிலிருந்து அவல் கொட்டுவதுபோல் ஏதாவது சொற்களைப் புரட்டுவேன். எனக்கு ஒருபக்கம் சிரிப்பு; ஒருபக்கம் துக்கம். இந்த உலகில் பெரும்பாலோருக்குக் கவி பாடுபவனைக் கண்ட மனிதர் முன்னும் நிறுத்தி இழிவுபடுத்துவதில் ஓர் இன்பம். இதோடு நில்லாமல், "ஏதாவது நல்வாக்கு அருளுங்கள்" என்கிறார்கள். நல்வாக்கு என்பது எதைக் குறிக்கிறது? யோசித்துப் பாருங்கள். பொதுமக்கள் என்னும் உணர்வற்ற பொருளின் செவிட்டுக் காதில் எதற்கும், எவருக்கும் பயன்படாச் சில விஷயங்களை உளறுவதைத்தான் — பரலோகத்திலிருக்கும் எண்ணிறந்த பிதிருக்களை உத்தேசித்து இடும் பிண்டபலி போலத்தான் இதுவும். அந்தப் பிண்டம் யார் தின்பதற்கும் அன்று. அதில் சுவையும் இல்லை. அதில் அழகும் இல்லை. பசியிலோ சுவைக்கும் சக்தியிலோ இராத ஒன்றை நோக்கி எவ்வளவு இனிய விஷயங்களை எடுத்துச் சொன்னாலும் என்ன பயன்? நல்வாக்கு விடுப்பதும் இப்படித்தான்.

இன்று பிற்பகல் வண்டியில் பினாங்குக்குச் செல்ல ஏற்பாடாகியிருக்கிறது. அதற்கு முன் நேரமிருந்தால் குளித்துவிட்டு, வாயில் இரண்டுபிடி அள்ளிப் போட்டுக்கொள்ளலாம். ஓர் இடத்தில் கூட்டத்தில் பேசவேண்டியிருக்கிறது. அசௌகரியம் இருந்தாலும் தலை காட்டவேண்டியது அவசியம். தூக்கம் இல்லை. சற்றும் ஓய்வில்லை. அமைதி இல்லை. கடிதம் எழுதக்கூட அவகாசமில்லை. பின்னர் அலுப்பைத் தரும் நீண்ட ரயில் பயணம். சில இடங்களில் கழுத்தில் மாலையைச் சுமக்கவேண்டும். ஜனங்களின் வரவேற்புக்குத் தகுந்தபடி இன்முகம் காட்டவேண்டும். புதிய இடங்களில் புதுமாதிரியான வாழ்க்கை. அப்பால்-15-ஆம் தேதியன்று கப்பலேறி ஜாவாவுக்குப் புறப்படவேண்டியது-அதற்குமேல் புதிய அத்தியாயம்!

'விஜயலக்ஷ்மி'

அன்றொரு நாள் தொன்மையில்
இழைந்தோம் நாம் இங்கு;
ஒருமித்தன நம் இருவர் உள்ளமும்;
நம் மொழியும் ஒன்று கலந்தன.
தூரக் கடலின் கரைமிசை ஆடும்
தென்னஞ் சோலையின் அடர் நிழலில் வீற்று.
நெடுவான் வழியே, தூது அனுப்பினை நீ.
வலநேர் திரிதரும் குணதிசை எழிலியை.
கங்கைக் கரையமர் கோயிலில் அன்று
விம்மிற்று, தூவெண்சங்கம்;
அதனுடன் இணைந்தொலித்தது உன் குரலும்.
மாயோன் என் செவியில் பகன்றான்;
பல்கரம் தாங்கும் இப்பாரின் அன்னையும் எவல்
[செய்தாள்:
'முன் பாராத அம்முந்நீர் எல்லையில் வழிபடு
[என்னை' என்றே.
மந்தாகினியின் புனலும் தன அலைக்கை நீட்டி
'வருக நீ, வருக' என்றே தூண்டியது.
இராமனைப் பாடிய முதுபுலவனும் விசும்பிடையே
[கூறினன் ஆசி:
'திரைகடல் அப்பாலும் விளக்கிடு என்
[கலைதனை' என்றே.
பாரதம் வகுத்த வியாசனும் உளமகிழ்ந்தான் என்
[விண்ணப்பம் கேட்டு:
'அக்கரை நிழலிலும் எனக்கோர் இல்லம் காண்
பேன்' என்றான்.
என்றன் நாடும் உள்ளம் விண்டே உரைத்தது:
'அழைத்துச்செல் என்னை, அவ்வதிசயநாட்டிற்கு'
[என்றே.

இளங் காலை; நீலப்பரப்பிடை மிதந்தது என் வங்கம்
வெண்சிலை ஊதி. காற்றும் அதை உந்தியது.
உன் துறையை அண்ணியதும் மூண்டது பெருங்கலகலப்பு.
நானக மகளிர் தம் பைந்நிறத்தானையை வீசியே
[அழைத்தனர்.
நாம் கூடிக் குலவிய அந்நாள் இருளார் யுகத்திடை
[மறைந்தது.

எழுமீன் சுடர்விடும் கங்குல் வானிடை
கம்பிதனை தரும் இன்முறுவல் தோன்றியது.
நம் வைகறைக் குறியிடம் புலரிப்பாவை
பரப்பினள் பொன்னிதழ் மலரை.
உயிரும் உடலும் போல இன்புற்று
இருந்தோம் நாம் அன்று.
சேர்ந்தே நாம் பாறை அடுக்கித்
திருவின் கோயில் சமைத்தோம்.
அன்பு நெறியில் ஒழுகியே இருவரும்
ஏற்றமோ தாழ்வோ இன்றி வாழ்ந்தனம்.
இவ்வின்பத்திடையே தலையிடும் காலம்
தந்தது பிரிவின் வெந்துயரை.
அக்காலத் தேரின் புழுதியினுள்ளே
ஆழ்ந்தது நாம் ஆக்கிய பொன் உலகு.
வறண்டது என் உள்ளம்; சோர்ந்தது என் கை.
மறதியின் வெள்ளம் ஒதுக்கியது என் கரைக்கே.
எறிகடல் நெடுநாள் இக்கதையை
ஏனோ என்னிடம் மறைத்தது!
தொன்மையில் நம் உள்ளம் துடித்ததோர்
[விந்தையை
வரைதாழ் பகிரதி இயம்பாததேனோ!
மீண்டும் கேட்டது உன் குரலிசை;

தோகை விரித்தே ஆடியது என் உள்ளம்.
ஆயிரம் ஆண்டுகள் நீந்தியே
வந்தடைந்தேன் உன் அகத்துள்.
என்னைக் கண்டதும் தளிர்த்தது உன் உயிர்.
பொழிலிடை அன்று நிகழ்ந்த காட்சியினை
அகக்கண்முன் இன்றும் காண்பாய்.
அன்பின் மணிப்பூண் அணிந்திருந்தோம்.
கரங்கள் கோத்து, நாம் உலவிய காவில்
நாம் பயின்ற இன்சுவைக் கீதங்கள்
இன்றும் இச்சிற்பச்சிதைவில் ஒலிப்பதைப் பார்.
இதையே குறிப்பில் கொண்டு வந்துற்றேன் நான்
நலம் தரும் இவ்வேளையிலே.
உன் நெஞ்சம் அறிவேன் நான்;
என்னையும் நீ அறிவாய்:
பண்டு நாம் உறவினரே.
இன்று புத்துயிர் பெற்றது
நெஞ்சில் பின்னிய அந்நாள் நட்பு!



## 9

மலாயாத் தீவுகளைப்பற்றிய விவரங்களையெல்லாம் என்னுடன் வந்தவர்கள் எழுதிய கடிதங்களிலிருந்து தெரிந்துகொண்டிருப்பாய். நின்று நிதானமாகக் கவனிப்பதற்கும், ஆழ்ந்து சிந்தனை செய்வதற்கும், விரிவாக எழுதுவதற்கும் போதிய அவகாசம் இல்லை. ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போவதும் வருவதும், பிரசங்கம் செய்வதுமாகக் காலம் போய்விடுகிறது. பினங்கிலிருந்து கப்பல் ஏறி முதலில் ஜாவாவின் தலைநகரான படேவியாவை வந்தடைந்தேன். இக்காலத்தில் உலகெங்கும் மாநகரங்கள் அந்த அந்த நாட்டிற்குரிய நகரங்களாக இராமல் காலத்திற்கேற்ற பட்டணங்களாகத் திகழ்கின்றன. இந்த யுகத்துப் புதுமை வாய்ந்தவை அவை. ஒரே சாயலான முகம், அலங்காரத்தில் சில வித்தியாசங்கள் இருக்கலாம். சிலவற்றின் தலைப்பாகை பகட்டாக இருக்கும். ஆனால் மேல் அங்கியில் வேண்டிய அளவு பித்தான்கள் இருக்க, வேஷ்டியின் கொய்சுவம் பட்டையான மடிப்புடன் இருக்கும். அங்கவஸ்திரம் சலவையைக் கண்டு எத்தனை நாள் ஆயிற்றோ?-நம் கல்கத்தா எப்படியோ அதுபோலத்தான்! சில மிகவும் திருத்தமாக படேவியா போல்; மாசு மறு இராமல் பளிச்சென்று காட்சி தரும். இந்தக் காலத்து நகரங்கள் எல்லாம் ஒரே தோற்றம் உடையவை என்றேனே, அது சரியன்று. முகத்தின் இலட்சணம் தெரிவதில்லை. நாம் அவற்றின் முக மூடியைத்தான் பார்க்கிறோம். அவை ஒரே தொழிற்சாலையில் ஒரே அச்சில் உருவானவை. சில நகரங்கள் இந்த முக மூடியை மெருகிட்டுப் பளபளப்பாக வைத்துக்கொள்கின்றன; மற்றவை கவனிப்பின்றி அழுக்கு வழியப் போட்டுக் கொண்டிருக்கின்றன. இவைகளை மணம்புரிந்த மாப்பிள்ளைகள் வெவ்வேறானவர். இவர்கள் காட்டும் ஆதரவுக்கிடையே என்ன வேறுபாடு! ஸ்ரீமதி படேவியாவுக்கு

உச்சந்தலை முதல் உள்ளங்கால்வரை அலங்காரத்திற்குக் குறைவில்லை. அதற்குமேல் சோப்புத் தேய்த்து வாசனை பூசி மேனிப் பொலிவை விருத்தி செய்கிருள். ஆனால் நம் கல்கத்தாவோ சுமங்கலி என்பதற்குக் கையில் இரும்பு வளை இருக்கிறதே தவிரப் பொன்தொடியோ இரத்தினக் கண்டியோ அவள் அணிந்திருக்கவில்லை. அவள் எந்த நீரில் குளிக்கிருளோ, அந்த வண்டலின அழுக்கு ஏறி அவள் துடைத்துக்கொள்ளும் சவுக்கங்கூடப் பழுப்படைந்திருக்கிறது. நான் சித்பூர் சகதியில் வசிப்பவன் அல்லவா? படாவியாவை அடைந்ததும் தேய்நிலவின் இருளிலிருந்து வளர்நிலவின் வெளிச்சத்திற்கு வந்ததுபோல் எனக்கோர் ஆறுதல் உண்டாயிற்று.

ஓட்டல் என்னும் கூண்டினுள் மூன்று நாட்கள் அடைபட்டுக் கிடந்தேன். வரவேற்புக்கும் உபசரணைக்கும் குறைவில்லை. அதன் விவரம் சுநீதி உனக்கு எழுதுவார். எதையும் நன்கு காணும் ஆற்றல் இருப்பதுபோல், சுநீதிக்கு உள்ளத்தில் பதிவு செய்துகொள்ளும் சக்தியும் மிகுதி; விஷயங்களை ஆராய்வதில் ஆற்றல் எவ்வளவோ, அவ்வளவு திரட்டிக்கொள்வதிலும் உண்டு. கண்டதும் கேட்டதுமான அநுபவத்தைத் தினையளவேனும் சிதறவிடாமல் காப்பவர். கொடுக்கவும் தெரியும்; வாங்கவும் தெரியும் அவருக்கு. அவர் எழுத்தின்மூலம் உங்களுக்கு எட்டும் இந்த யாத்திரை நிகழ்ச்சி எதுவுமே பழுதின்றி என்றென்றும் நிலவும்.

படாவியாவிலிருந்து ஸ்டீமர் மூலம் பலித்தீவை நோக்கிப் புறப்பட்டேன். சில மணிநேரம் சுரபாயா நகரில் நாங்கள் தங்கினேம். இதுவும் இந்தக் காலத்து நகரம். ஜாவாவின் உறுப்பாக இராமல் அதை ஒட்டி வளர்ந்ததாகும். அலாதீனுடைய மாய விளக்கின் உதவியால் இந்நகரை நியூஜீலந்தின் ஒரு மூலைக்குக் கொண்டுபோக முடியுமானல் அந்த இடத்திலும் இது ஒத்து விளங்கும்.

இதைக் கடந்து பலித் தீவை வந்தடைந்தேன். மாநிலத்தின் என்றும் இளமையான உருவை இங்கே தான் கண்டேன். பழைய யுகம் இந்த இடத்தில்தான், இன்னும் தன் நிறமும் ஒளியும் குன்றாமல் அழகுடன் திகழ்கிறது. அன்னபூரணி அமரும் பீடம் போல், வான் விளிம்புவரையில் பசுங்கதிர்கள் ஆடும் வயல் பரப்பு; இளநிழற்சோலையுள் அமைதியுடன் மனிதர் நடத்தும் வாழ்க்கை. நெடுநேர ஓய்வு; அதைப் பயன்படுத்த விசித்திர விழாக்கள்.

இந்தத் தீவில் இரயில் என்ற பெயரே இல்லை. இரயில் வண்டி என்பது இந்த யுகத்தின் அடையாளம்-வாகனம். இந்தக் காலம் கஞ்சத்தன்மை வாய்ந்தது. எதையும் தன் விருப்பம் போல் செல்ல விடுவதில்லை. இன்றைய மக்கள் பணமே பெரிது என்ற கொள்கையினர். வீண் செலவை நிறுத்தவே இந்த இரயில் எஞ்சின் இரைக்க இரைக்க, கரிப்புகையைக் கக்கக் கக்க மண்ணுலகு கிறு கிறுக்கப் பல நாடுகளை ஒன்றாக இணைக்க விரைகிறது. காலத்தை மிச்சப்படுத்துவதோடு காசையும் மிகைப் படுத்துகிறது. ஆனால் இந்தப் பலித்தீவில் நிகழ்காலமானது போன எத்தனையோ நூற்றாண்டுகளுடன் இழைந்து ஒன்றாகிவிட்டது. இங்கே காலத்தை மிச்சப்படுத்துவதற்கு அவசியமே இல்லை. இங்கே இருப்பன யாவும் நித்தியகாலமானவை. பருவக் காலங்கள்தோறும் பூவும் புள்ளும், வண்ணமும் மணமும், காயும் கனியும் மாறுவதை ஒத்து இங்குள்ள மக்கள் அன்றொரு நாள் இருந்த விதமே, வழி வழியாகப் பெருகிவரும் கூத்தும் பாட்டும் விழவும் இன்றளவும் தம் வாழ்வில் பொலிய இருந்து கொண்டிருக்கிறார்கள்.

இரயில் இங்கே இல்லை; ஆனால் மேல்நாட்டிலிருந்து வரும் உலகசஞ்சாரிகளின் சௌகரியத்திற்காக மோட்டார் வண்டி காத்துக்கொண்டிருக்கிறது. ஒரே நாளில்

காடெங்கும் சுற்றிப் பார்த்துவிட்டுத் தம் அநுபவங்களை எழுதுவோர் இவர்கள். மணிக்கணக்கில் வேலை செய்யும் இந்தப் பிரயாணிகள் மணிக்கு மதிப்பிராத இடத்திற்கு வருகிறார்கள். காடு, மலை, ஊரெல்லாம் கடந்து எங்கள் மோட்டார் பறக்கிறது. இங்குள்ள காட்சிகளைக் கண்ணாரக் காண வேண்டின் காலால் நடந்துசெல்வதே சிறந்த வழி. வான அளாவும் கட்டிடங்களிடையே பார்த்தும் பார்க்காமலும் மோட்டார் ஊர்தியில் செல்வதனால் கெட்டுப் போகிற காரியம் ஒன்றுமில்லை. ஆனால் கண்ணுக்கு இனிமை ஊட்டும் இந்தத் தீவில் காரை அப்புறப்படுத்தி விட்டுக் காலை உபயோகித்துக்கொள்வதுதான் ஏற்புடையதாகும். வேட்டைமேல் செல்லும் துஷ்யந்தன் தேரைக் கடாவுகிறான். என்ன வேகமாய்ப் பறக்கிறது அது! இதைத்தான் 'முன்னேற்றம்' என்கிறோம்; ஓர் இலக்கை நோக்கி அம்பெய்யும் பரபரப்பு இது. ஆனால் தபோவனத்தைக் கண்ணியதும் தேரை நிறுத்தி அவன் இறங்கவேண்டியதாயிற்று—இலக்கை எய்தவன் நசையினால் அன்று; ஒரு பெரிய ஆறுதலைப் பெறும் ஆசையினால்தான். வெற்றியைப் பற்றவேண்டின் ஓடியே தீரவேண்டும். அழகைக் காண விழைந்தால் மெல்ல ஊர்ந்துதான் செல்லவேண்டும். இந்தக் காலத்திலோ வெற்றியே யாருக்கும் நாட்டம். அதனாலேயே இந்தப் புதுயுக ஊர்திகளின் விசையும் பெருகிக்கொண்டே போகிறது; கடைசியில் எந்தப் படுகுழியில் தள்ளுமோ! யாத்திரிகர்கள் ஆற அமர நோக்காமல் மேல்வாரியாகக் கண்ணைச் செலுத்திவிட்டுப் போகிறார்கள். ஹாம்லெட் வேஷத்தில் ஒருவன் மேடை நடித்துப் பார்ப்பதில் சுவாரசியமே இல்லை; ஆனால் சினிமாவில் ஓடும் ஹாம்லெட்டின் நிழலுக்குத்தான் வெற்றி!

எங்கள் மோட்டார் நின்ற இடத்திற்கு எதிரே ஒரு பெரிய திருவிழாக்கொண்டாட்டம் நடந்தது. இடத்தின்

பெயர் பாங்லி. அரசவம்சத்தைச் சேர்ந்த யாருக்கோ நடக்கும் ஈமச்சடங்கு அது. சோகக் குறியே காணவில்லை. இருக்க வேண்டிய காரணமும் இல்லை. அந்த அரசகுலத்தவன் இறந்துபோய் எத்தனையோ நாட்களாயின. அவனுடைய ஆன்மா இதற்குள் பொன்னுலகை அடைந்து அமரவாழ்வும் எய்தியிருக்கும். அவன் உடல்மட்டும் இந்த விழாவிற்காகக் காத்திருக்கிறது. இதைக் குறித்துத் தொலைவிலுள்ள கிராம கிராமாந்தரங்களிலிருந்து ஆடவரும் பெண்டிரும் கூடை கூடையாக, தட்டுத் தட்டாகக் காணிக்கைகளைச் சுமந்து வந்துகொண்டிருந்தனர். இது புராணத்தில் நாம் கண்ட ஒரு காட்சி திடுமெனக் கண்முன் உயிர்பெற்று எழுந்ததுபோலவே இருந்தது. அஜந்தாவின் இருண்ட குகைகளிலிருந்து அழகிகளின் ஓவியங்கள் இங்கே பளிச்சென்ற சூரிய ஒளியில் உலவுவதைப் பார்த்தேன். அந்தச் சித்திரங்களில் தென்படும் அலங்காரங்களைப் போலவே இந்தச் சாவக மடந்தையரும் பூண்டிருந்தனர். இந் நாட்டு இயற்கை எழிலுக்கு ஏற்ப இந்தப் பூவையரின் உடல் வனப்பும் அமைந்திருந்தது. விழாவைக் காண வந்திருந்த சில அமெரிக்கப் பாதிரிகளின் வைராக்கியம் பாய்ந்த உள்ளத்தையும் இந்த அற்புதக் காட்சிகள் அசைத்தன வென்றால் பார்த்துக்கொள்.

வெள்ளிக் களத்தில் மக்களான மக்கள்! இதன் மத்தியில் மூங்கிற்கால்களை நிறுத்தி எழுப்பிய மேடைமீது இவ்வூர்ப் பிராம்மணர்கள் உச்சிச் சிகையினராய், பழம், பூ, பட்சணம் இவற்றின் குவைகளுக்கிடையே வீற்றுக் கைவிரல்களால் பலவித முத்திரைகள் காட்டி மந்திரம் ஓதிக்கொண் டிருந்தனர். எங்கோ ஒரு புறம் விசித்திர வாத்தியங்கள் ஒன்றாக இழைந்து ஒலிக்கும் இசை. ஓரிடத்தில் பெரிய கூடாரத்துள் புராண சம்பந்தமான கூத்து நடந்துகொண் டிருந்தது. இவ்வளவு விநோதமான ஏற்பாடுகளுடன் கூடிய ஒரு விழாவை என்

குமே நான் பார்த்ததில்லை. ஓரிடத்திலாவது அசங்கியமோ, அலட்சணமோ தென்படவேண்டுமே; ஒன்றுமே இல்லை! இவ்வளவு ஆடம்பரமான உற்சவத்திடையே இறைபடும் இத்தனை பொருட் குவியல்களையும் மக்கள் தாண்டிச் செல்லும்போது ஒன்றுவது நிலை குலையவேண்டுமே! ஜனநெருக்கம் இருந்தும் அமைதியைக் கலைக்கக் கூச்சலோ கொம்மாளமோ இராததுதான் வியப்பு. விழாவினுள் மண்டியிருக்கும் ஓர் அழகிய ஒற்றுமை அப்பெருமக்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டது. இந்தக் கொண்டாட்டம் பரியதோர்விஷயம்; சடங்குகள் யாவும் பெரிய அளவின. எண்ணற்ற விசித்திரமான காட்சிகள். இதன் அருமையை விரிவாக வருணிக்கவொண்ணாது. இந்துக்களின் ஆசார அநுஷ்டானங்களோடு இந் நாட்டினரின் மனப்பாங்கும் ஒன்றிவளர்ந்ததே நாம் ஆய்ந்து பார்க்கவேண்டிய விஷயம். அப்போது, மறைந்துபோன பழைய உண்மை எவ்வளவோ வெளியாகும். அளவற்ற பொருள்களைக் கொட்டிக் குவிப்பதால் மட்டும் சிறப்பு வெளியாகாது. அவற்றைக் கண்கவர் முறையில் அடுக்கி வைப்பதில்தான் உயர்வு இருக்கிறது. இந்த நுட்பத்தை அறிந்தவர்கள் பலி மக்கள்.

ஜாவாவின் இயற்கைத் தோற்றம் ஓர் அளவிற்கு ஜப்பானை ஒத்திருக்கிறது. ஜப்பானைப் போலவே இதுவும் சிறிய தீவே. இயற்கை வளம் நிரம்பியது; எதுவும் செழுமையாக வளரக்கூடிய இடம். அடிக்கு அடி பச்சை நிறக் குன்றுகள்; தாவும் அருவிகள்; பளிங்கு நீர் புரளும் ஆறுகள்; கண்ணுக்கெட்டியவரை சமவெளிகள்; அடர்ந்த காடுகள்; எரிமலைகள்; நீர் ததும்பும் குளங்கள். போக்கு வரத்துக்கு இடையூறே இல்லை. ஆறும் குன்றும் அளவில் சிறியனவே. ஜனத்தொகை அதிகம். நிலப்பரப்புச் சிறிது. இதனால் பயிரிடாத நிலத்துண்டே இல்லை எனலாம். இவர்கள் உழவுத் தொழிலில் திறமை

உடையோர். சாகுபடி செய்வதில் நெடுநாள் அநுபவம் மிக்கவர். நீர்ப்பாசனத்திற்கு ஏராளமான வசதி உண்டு. வறுமையோ நோயோ இங்கே சற்றும் தென்படவில்லை. காற்றும் நீரும் ஆரோக்கியமும் தரும் இடம். தேவதைகளின் வழிபாடு, விசித்திரக் கதைகள், விதம் விதமான விழாக்கள் இவை மலிந்த நாடு. இந்துச் சமயக் கொள்கைகள் இயல்பாகவே இவர்கள் வாழ்க்கையில் ஊறியிருக்கின்றன. இவ்வரிய உறவினால் இந்நாட்டுக் கலைப்பண்பும் சமூக நிலையும் பலமுகமாகப் படர்ந்து வளர்ச்சி பெற்றுள்ளன எனலாம்.

ஜப்பானுக்கும் இந்நாட்டிற்கும் இடையே ஒரு பெரிய வேற்றுமை. ஜப்பான் குளிர்ந்த பிரதேசம். ஜாவா வெப்பமான இடம். கடுமையான குளிரைப் பொறுத்துக்கொள்வதனாலேயே மற்ற வல்லரசுகளெதிரே தலை தூக்கி நிற்கும் உரம் ஜப்பானிடம் தென்படுகிறது. ஆனால் ஜாவா, பலியால் அது முடியவில்லை. தம்மைக் காத்துக்கொள்ள வேண்டிய தீவிர உழைப்பு இவைகளிடம் இல்லை. வெம்மையான பிரதேசத்தில் உயிர் இனங்கள் எவ்வளவு மடமடவென்று வளர்கின்றனவோ அவ்வளவு விரைவில் அழிந்தும் போகின்றன. பிராண சக்தியைச் சேமிக்கும் வழி இல்லை. இயற்கை மலிவாகப் படைத்து விடுகிறது. அப் படைப்பு நிலைப்பதற்கு ஒரு வழியும் அது செய்யவில்லை. படாவியா நகரம் இவ்வளவு ஒழுங்காகவும் கச்சிதமாகவும் அமைவதற்குக் காரணம் என்ன? குளிர்நாட்டுவாசிகளான டச்சுக்காரர்கள் இதைப் பரிபாலிப்பதனால்தான். குளிரிலேயே பழகிப் போன அவர்களுடைய தேகம் அமோக சக்திக்கு இருப்பிடம். வளம் சுருங்கிய இடத்தில் செல்வத்தைத் தேடித் திரட்ட எவ்வளவு உழைப்பு வேண்டும்? இந்த உழைப்பே வமிசக்கிரமமான அவர்கள் இரத்தத்தில் சக்தியைப் பாய்ச்சியது. எதற்கும் சலிக்காத நெஞ்சினராய், எத்துறையிலும் ஆர்வத்துடன் இறங்கி மாபெருஞ்செயல்களில் வெற்றி

பெறுகின்றனர். உஷ்ணதேச மனிதர்களான நாமோ இது போதுமே என்று பாதியில் நின்றுவிடுகிறோம். முயற்சி என்பது இதயத்துள் எழும் வெறும் உணர்வுமட்டுமன்று; அது சக்தியைக் கிளப்பும் ஒரு தூண்டுகோல். ஆக்க மென்ற கனலை எழுப்பக் கடுமையான சாதனை அவசியம். எங்கே இந்தச் சாதனையின் சேமிப்புக் குறைவோ அங்கே பற்றின்மை (வைராக்கியம்) தலைகாட்டும். ஒருவனுக்குத் தன்மீதுள்ள நம்பிக்கையைத் தொலைத்துவிடுகிறது இந்த மனப்பான்மை. விலக்கிக்கொள்ளக் கூடிய இடையூறு; நலக்குறைவு இவற்றைப் பொறுத்துக்கொண்டு நம்மையே நாம் ஏமாற்றிக்கொள்ள, 'என்ன தியாகம் செய்கிறோம்' என்றெல்லாம் சொல்லித் திரிகிறோம்; பிறருக்கு உபதேசம் செய்கிறோம். ஆற்றல் மிகுந்தவர்கள் இவற்றால் இன்புறுவர் என்பது உண்மையே. கஷ்டங்களிலிருந்து மீண்டுவரும் வழியைக் காணப் புகுவோர், அழிவிலிருந்து தப்பி வாழ்பவர் இத்தகையோரே உலகை ஆளத் தகுதி வாய்ந்தவர்.

ஐரோப்பாவுக்குப் போயிருந்தபோது அங்கே உள்ள மக்களிடையே தோன்றிய விழிப்பும் உறுதியும் என்னை வெகுவாகக் கவர்ந்தன. விஞ்ஞானம் என்று எதைக் குறிப்பிடுகிறோமோ அது வேறொன்றுமில்லை; அறிவைப் பெறத் துடிக்கும் அடங்காததோர் ஆர்வமே. இந்த ஞான ஆராய்ச்சியில் ஐயத்திற்குத் துளியேனும் இடம் இல்லை; வேடிக்கை விளையாட்டிற்கு மதிப்பில்லை. இந்த ஆராய்ச்சியில், 'இவ்வாறு எண்ணிக்கொள்வோம்' என்றோ 'என்மனார் புலவர்' என்றோ முடிவு கட்டுவதற்கு வழி இல்லை. அறிவுத்துறையிலும் அறத்துறையிலும் இந்த ஆன்ம சக்திக்கு என்று களைப்போ சோம்பலோ மேலிடு கிறதோ அன்று வைராக்கியம் எட்டிப் பார்க்கிறது. பல வீன மன நிலையில் தான் முன்னோர் வாக்கு, மான்மியம் எல்லாம் முளைக்கின்றன. அறிவுப் பயிரை

நசுக்கும் புற்பூண்டு இவை. சலிப்பிராத உழைப்புக்கும், அறிவு வளர்ச்சிக்கும் முட்டுக் கட்டையாக நிற்பவை இவைதாம். நம்மைச் சூழ்ந்து மலைபோல் குவிந்து வரும் ஒரு பொய்யின்குப்பை நம் மனிதத்தன்மையையே முடிவில் அழுத்திவிடுகிறது. சுய ஆற்றல் இராத நாட்டின் கலை, சிற்பம் போன்ற துறைகளில் மனிதர் மென்றதையே மெல்லுகின்றனர். குருட்டாட்டம் ஆடுகிறார்கள். முன்னேறாமல் ஒரே இடத்தில் சுழல்கிறார்கள். சென்னையைச் சேர்ந்த பணக்காரச் செட்டியார் ஒருவர் 35 லட்சம் ரூபாய் செலவில் ஆயிரம் ஆண்டுகள் புராதனமான ஒரு கோயிலின் நகல் எழுப்பியிருக்கிறார். இங்கே ஆக்கம் ஒன்றைப் பின்பற்றுவதோடு நின்றுவிட்டது. கலைப்புற மனத்துள் படைக்கும் சக்தி வறண்டு விடுகிறது. கூடு திறந்திருந்தும் பழக்க தோஷத்தால் பறவை சிறகை அடித்துக்கொண்டு வெளியேற விரும்பாமல் நிற்கிறது. கூட்டிற்குள் அடிமையாக வாழும் ஒரு பறவை இந்த உலகத்தில் பிறர் எவர்க்கும் அடிமை பூண்டே இருக்கும். இதிலே அதற்கு ஒரு மோகம்!

இந்நாட்டில் நடைபெறும் ஒவ்வொரு சடங்கும் விசித்திரமும் அழகும் நிரம்பியவை. இங்கு வந்ததிலிருந்து இதைப் பார்த்து நான் மகிழ்வெய்தியது இவ்வளவு அவ்வளவன்று. அப்பால் சந்தேகம் எழுந்தது; ஒருவேளை நான் காண்பது வெறும் கூட்டின் அழகுதானோ? மனித உள்ளம் இங்கேயும் தன் விருப்பம்போல் உலவாமல் சோம்பிக் கிடக்கின்றதோ என்றெல்லாம் எண்ணினேன். தொன்மையான கலையாவும் இவர்களுடைய பழக்கவழக்கங்களில் தோய்ந்து இன்றளவும் மங்காமல் வந்துகொண்டிருக்கின்றன. வேற்றூரினரான எங்களுக்கு இதைக் கவனிக்கக் கிடைத்தற்கரிய சந்தர்ப்பம் வாய்த்தது. மறைந்து போனஒருகாலத்தின் உருவை இன்று அப்படியே காணலாம். பண்டையுகப் பெருமையை இன்று இருப்போர் நவ

டம் உள்ளாகிறதன. குமிழ்த்தெழுந்த இந்த
பெருமுயற்சியுடன் விசித்திரப் படைப்பு
வெளிப்படுத்திக்கொண்டது. ஆனால் ஒரு
காலம் பழங்காலந்தானே; இந்தக் காலத்து
தானே அது நிற்கவேண்டும்? இந்தக் கால
விட்டு அது முன்னால் வந்து நிற்பது ஏன்?
தாங்கிவரும் வாகனம் நான். அதற்கு நா
போனேன்' என்கிறது புதிய காலம். '
துக்கொண்டு அதை வெளிக் கொணர்வே
என்று உள்ளம் வெம்பிச் சொல்கிறது நவீ
சுய ஆற்றலில் நம்பிக்கையை இழந்துவிடுகி
பைப் போட்டுக்கொள்வதில் துன்பம்
ஆகவே, முடிந்தவரை அதைக் குறைத்து
தொந்தரை எதற்கு? இது ஒரு நாடு நாசமாக
நேரான பாட்டை! அன்று பாங்லியில் நா
விழா பிரேத ஆன்மாக்கள் தென்புலத்தி
தைச் சிறப்பிக்கும் கொண்டாட்டம். மா
எத்தனையோ நாட்களாயின. இறந்தவனு
பரமபதம் சேர்ந்ததைக் குறிப்பிட்டு இந்த
உற்சவம் நடைபெறுகிறது. சுகவதி என்
உபுத் என்ற ஊரில் வருகிற செப்டம்பர்5-ஆ
தகனக்கிரியை நடக்கும். எவ்வளவோ செ
டெல்லாம் நடந்திருக்கின்றன. ஆனால் அ
செட்டியாரின் 35 லட்சம் பெறுமான கோயி
டையில் எவ்வாறு நடந்ததோ அதேபோல்
தச் சவச் சடங்கும். இதற்குச் செலவாகும்
பண்டங்களையும் சேகரிக்க எத்தனை நாட்க

கொண்டிருக்கிறது இந்தச் சம்பிரதாயம். பழங் கதைகளைப் புதுப்பிக்க எவ்வளவு காலவிரயம், பணவிரயம், மூளை விரயம்! இவற்றையெல்லாம் பார்த்தபின் அடிக்கடி எனக்கு ஓர் எண்ணம் தோன்றுகிறது. அந்தப் பழங் காலம் எவ்வளவு மகிமை பெற்றதாயினும், இந்தக் காலம் எந்த விதத்திலும் உயர்வுடையதே; இது தன்னைப்பற்றிப் பெருமை கொள்வதில் தவறு இல்லை. எதையும் வென்று வரும் வலிமை தனக்கு உண்டென்பதை இது உணரவேண்டும்!

## 10

நான் தங்கியிருக்கும் இடம் ஒரு மலையின் உச்சியில் உள்ள பங்களா. இளங் காலை. மெல்லிய காற்று வீசுகிறது. ஆகாயத்தில் முகிற் கூட்டம் அணிவகுத்துச் செல்கிறது. ஒரு சமயம் அது சூரியனை மறைக்கின்றது; ஒரு சமயம் விடுவிக்கின்றது. மலை என்றதும் மனக் கண்முன் எழுவதுபோன்ற காட்சியன்று இது. சிகரக்கூட்டங்கள் தென்படும் மலையடுக்கும் அன்று. நான் உட்கார்ந்திருக்கும் வராந்தாவிலிருந்து பார்த்தால் எதிரே பூமி சரிவாக இறங்கிப் பள்ளத்தாக்காக மாறி விடுகிறது. அதன் மடியில் ஓடை ஒன்று பாம்பு ஊர்வதுபோல் வளைந்து செல்கிறது. எதிர்ப்புறமாகக் கீழே அரைமதிபோல் ஏரியும் அதன் கரையும் தென்படுகின்றன. அதன்மீது ஓலை விரித்தாடும் தென்னஞ்சோலை. குன்றின் மேல்மட்டத்திலிருந்து கீழ்வரைக்கும் படிப் படியான வயற் பண்ணைகள். குன்றின் இதயத்திலிருந்து இறங்குவது போல் ஒரு கிளை வழி, பள்ளத்திலுள்ள நீர் நிலைவரைக்கும் வந்து நின்று விடுகிறது. அதன் பக்கத்திலேயே ஓர் ஊறல். இந் நாட்டினர் இதை ஒரு புண்ணிய தீர்த்தமாகக் கருதுகின்றனர். கிராம மடந்தையர் நீராட

வும், குடி தண்ணீர் மொள்ளவும் இங்கே வரத் தவறுவ தில்லை. இந்த ஜலத்தில் குடைந்தாடினுல் எந்த விதமான பாவமும் போய்விடுமென்று சொல்லுகி ருர்கள். விசேஷ நாட்களில் புண்ணிய ஸ்நாநம் செய்வதற் குத் திரள் திரளாகவும் ஜனங்கள் வருகிருர்கள். ஊற்றுக் குத் 'தீர்த்த ஆம்புல்' என்று பெயர். தீர்த்தமென்ருல் நீரகம்; ஆம்புல் என்பது கயத்தின் பெயர். அதாவது: திரு ஊறல்.

இந்தப் புனித ஊற்றைக் குறித்துக் கதையொன்று உலவுகிறது. வெகு காலத்திற்கு முன்னர் ஓர் அரசனுக்கு அழகிற் சிறந்த பெண் ஒருத்தி இருந்தாள். அரச னுடைய அவையைச் சேர்ந்த ஓர் இளைஞன்மீது அவள் காதல் கொண்டாள். அவனுக்கும் அவள்மீது ஆசை தான். உயர்குலத்து மகளை, சற்றுத் தாழ்வான தான் மணப்பது அரசனை அகௌரவிப்பதாகுமென்று எண்ணி அவள் காட்டும் நட்பை ஏற்றுக்கொள்ளாமல் கடமையின் பொருட்டு அதை மறுத்துவிட்டான். இதனுல் அவ் வரசிளங்குமரி வெகுண்டு அவன் அருந்தும் உணவில் விஷம் வைத்துவிட்டாள். சிறிது உட்கொண்டதுமே இளை ஞனுக்குச் சந்தேகம் தட்டியது. இதை வெளிக்குச் சொன் ஞல் அரசன் மகளுக்கு இழுக்கு உண்டாகுமென்று அவன் இந்தத் தீர்த்தக் கரையருகில் மறைவாக மரித் துப் போகத் துணிந்தான். தேவதைகள் கருணை கூர்ந்து இந்தத் தூய ஊற்றின் நீரை அவனுக்கு ஊட்டி அவனைப் பிழைக்க வைத்தனர்.

இந்துக்களின் மனுேபாவமும் செயல்முறையும் இவர் கள் வாழ்வில் இணைந்து விளங்குவதை நான் பலவாருகக் கண்டு வியப்புற்றேன். இருந்தும் இந்து தருமம் இங்கே ஓரிடத்திலாவது கலப்பற்றதாகத் தென்படவில்லை; இங் குள்ளோரின் இயல்போடு ஒன்றுபட்டு இந்தத்தருமம் தனி உருவுடனும் தனி அழகுடனும்திகழ்கிறது. பாணி இந்துக்

களுடையது. உடுப்பு மட்டும் இவர்களுடையது. நான் வந்த முதல்நாளே ஓர் இடத்தில் இந் நாட்டு அரச குலத்தைச் சேர்ந்த ஒருவனுக்கு நடக்கும் ஈமச்சடங்கைக் காணச் சென்றிருந்தேன். இவர்கள் உடுப்பு, அலங்காரங்கள் யாவும் நம் நாட்டு வழக்கங்களோடு ஒத்திருக்கவில்லை. நாம் தென்புலத்தாருக்குச் செய்யும் கடமையினின்று வேறுபட்டது இந்தச் சடங்கு. ஆனால் இது சில விஷயங்களில் நம்முடைய முறையைத் தழுவியிருந்தது. உயரமான மேடையில் வீற்றிருக்கும் இந் நாட்டுப் பிராம்மணர்கள் உச்சிக் குடுமியுடன் மணி அடித்துத் தூபதீப நைவேத்தியங்களை விரல்களால் முத்திரைகள் காட்டி மந்திரம் ஓதிச் சமர்ப்பணம் செய்கிறார்கள். மந்திரங்களின் உச்சரிப்பிலோ கிரியைகளிலோ தவறுகள் தென்பட்டால் காரியமே பாழாகிவிடும், பலனைத் தராது என்பது ஒரு கொள்கை. இங்குள்ள பிராம்மணருக்குப் பூணூலே இல்லை. விசாரித்தபோது இவர்களுக்குக் 'காயத்திரி' மந்திரங்கூடத் தெரியாதாம். 'காயத்திரி' என்ற பெயர்மட்டும் கேள்விப்பட்டது உண்டாம்! ஒரு சமயம் இந்து மதத்தை முற்றும் தழுவி, தெய்வ வழிபாடு, ஆசாரம், அநுஷ்டானத்தோடு புராணம், ஸ்மிருதி போன்ற அறநூலும் பயின்றவர்கள் என்றே தெரிகிறது. அப்பால் வேரோடு இந்தத் தொடர்பு அற்றுப் போய்விட்டது போலும்! இந்தியாவுடன் கொண்ட உறவு எதனாலோ விலகியது. கடல் யாத்திரை நம்முடைய மதக் கொள்கைக்கு விரோதமானது. இந்தியர்கள், சாஸ்திரம் விதித்த கோட்டைத் தாண்டிச் செல்லாமல் பிறகாலத்தில் அடங்கியிருந்தனர். வெளியுலகில் திரிந்து தாராளமாக மூச்சுவிட்டுக் கலை, தத்துவம் போன்ற உண்மைகளைப் பரவச்செய்ய இடம் இருப்பதையே மறந்தொழிந்தனர். ஆனால் பலியில் இன்றும் அப்பழங்கால நட்பின் சின்னங்களை ஆன்றோர் உரைகளாகவும் சிலை வடிவங்களாகவும், அழகிய கோயில்களா

கவும் விசித்திர விழாக்களாகவும் காணலாம். முன் நாள் தொடங்கிய இந் நட்பை இவர்கள் அறவே மறந்து விட வில்லை. கருத்துடன் போற்றுவோர் இன்மையால் இந்தச் சின்னங்கள் சில, காலத்தின் கொடிய பசிக்கு உணவா யின; சில சிதைந்து சிதறுண்டு கிடக்கின்றன.

அன்று நம் நாட்டுடன் இவர்கள் இழைந்த உறவின் முழு உருவை இனிக் காண்பது அரிது; அதற்குள்ள பொருளும் மங்கிவிட்டது. இதன் விளைவு என்னவென் றால், பிளப்புண்ட இடங்களை, இக்காலத்து ஆராய்ச்சி யாளர் தம் கற்பனையைக் கொண்டு அடைக்கப் பார்க்கிறார் கள். பழமையான இந்து சமயத்தின் உடைந்துபோன சட்டத்தின் பேரில் இங்குள்ளவர் ஒருவிதமான சமூகத் தையும் சம்பிரதாயத்தையும் எழுப்பிக்கொண்டனர். இவ் விடத்தில் ஒரு சமயம், சிற்பம் ஓவியம் போன்ற கலைகளில் இந்திய ரீதியும் பாணியுமே முழுவதும் மண்டியிருந்தன. பிறகு இந்த இலட்சணங்கள் சிறிது சிறிதாக அருகிப் போயின. இந்து நாகரிகம் செழுமையாக்கிய துறைகளில் இவர்கள் தம் சுய ஆற்றலைக் கொண்டு, உழைத்து அபூர் வமான வெற்றியைக் கண்டனர். இவர்களுடைய பண்டை வரலாற்றின் பீடிகை இதுவே. மறந்ததும் மறக்காதது மான இச்சரித்திர உண்மைகளை நினைவிற் கொண்டு கந்தற் கூளத்திலிருந்து சுயமான சிந்தனையின் வன்மை யால் இந்நாடு வெளியே தலை தூக்கியது.

பலியில் முதன் முதலில் காரேம் ஆஸன் என்ற இடத் தில் அவ்வூர் அரசரின் மாளிகையில் நான் தங்குவதற்கு வசதி செய்திருந்தார்கள். பாங்லியில் நடந்த சிராத்த உற் சவத்திற்கு அவர் தம் குழுவினருடன் வந்திருந்தார். உலாந்தா நாட்டினரான கவர்னரைப் பகல் உணவுக்கு அங்கே அழைத்திருந்தார். அதில் நானும் ஒரு விருந்தி னன். காலை 6-30 மணிக்குக் கப்பல் தட்டிலிருந்து இறங்கி னேன். துறையிலிருந்து மோட்டாரில் 1½ மணிநேரம்

குலுங்கக் குலுங்க, மூக்கிலும், கண்ணிலும் புழுதியை அப்பிக்கொண்டு ஈமச் சடங்கு நடக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தேன். இந்த இடத்திலுள்ள வேடிக்கைகளைப் பார்க்கச் சுற்றி அலைந்துவிட்டு உடம்புக்குக்கூட ஊற்றிக்கொள்ளாமல் வெறுப்புடன் விருந்துண்ண அமர்ந்தேன். நெடுநேரம் வீண் பேச்சிலும், வகை வகையான பட்சணங்கள் உண்பதிலும் கழிந்தது. எங்களை உபசரித்த அரசருடன் மோட்டாரில் ஏறி மீண்டும் நீண்ட வழி கடந்து அவர் அரண்மனையை அடைந்தேன். அரண்மனையை அவர்கள் 'புரி' என்கிறார்கள். அரசர் சொல்வது எனக்கு விளங்கவில்லை; நான் பேசுவதும் அவருக்குப் புரியவில்லை. புரியும்படி சொல்லத் தக்க ஆள் எங்களுடன் இல்லை. அதனால் மௌனமாக நாங்கள் இருவரும் வெவ்வேறு மூலையில் கிடந்தோம்.

ஆனால் ஓர் அநுகூலம்: இங்கே திகழும் இயற்கை பலி நாட்டு மொழியில் பேசவில்லை! மாமைக் கலின் பூத்த அவளைக் கண்பசி தீரக் காணவிடாமல் துரிதகதியில் சென்ற மோட்டாரைத்தான் நான் சபித்தேன். இதைச் சொல்லும்போது எனக்கு ஒன்று ஞாபகம் வருகிறது: ஒரு சமயம் பாவம் இன்றி வறட்சியாகப் பாடும் பாடகர் ஒருவரின் கச்சேரிக்குப் போயிருந்தேன். இராகம் உருக்கமாக இருக்கும் இடத்தில், எவரும் மனோதருமத்தை எதிர்பார்த்து விசித்திர ஆலாபனத்தைக் கேட்க ஏங்கி நிற்பர். இந்தக் கட்டத்தில், உயரப் பறக்கும் கழுகின் தாரைக் குரலில் இந்த இசைவாணர் தம் பாழ்த்த குரலை எடுத்து 'ஸ்வரப் பிரஸ்தாரம்' செய்வார். ஒரு வட்டமிட்டு 'சட்ஜம்'த்தில் வந்து மூச்சுவிடுவார். பல்டி அடிக்கும் 'லோட்டன்' புறாவைப்போல் பல்லவியில் தானங்களைப் பின்னிப் பின்னி இசைக் கொலை புரிவார். நான் வெறுப்புற்று எழுந்து வந்துவிடுவேன். பாதையின் இரு மருங்கிலும் காடு, மலை, அருவி. ஆறு, கடல், தண்ணந்துறை,

இன்னிழற்சோலை, மல்லலம் மூதூர் இவைகளனைத்தும் சித்திரச் சுருள்போல் தோன்றி மறைந்துவிடும். மோட்டார் வண்டி துரிதகால கீர்த்தனைபோல் கடுவேகமாகச் சென்று புழுதிப் படலத்தைக் கிளப்பும். நின்று கவனிக்க வேண்டுமென்ற அக்கறை ஏன் அதற்கு? என் மனம் அடிக்கடி, 'சிறிது மெல்லப் போனால் இவற்றை நிதானயாகக் கவனிக்கலாமே' என்று ஏங்கும். இயந்திர அரக்கன், 'நேரம் இல்லை' என்று என்னை ஏளனம் செய்வதுபோல் தலை தெறிக்க ஓடுவான். ஓரிடத்தில் அடர்ந்த காட்டின் இடுக்கு வழியாகக் கடலின் நீலக் கீற்றுத் தென்பட்டது. இதைப் பார்த்த மன்னரும் நம்முடைய மொழியில், "ஸமுத்ர" என்றார். நான் வியப்புற்றதை நோக்கி அவர் மேலும் சொல்லத் தொடங்கினார்:— "ஸமுத்ர, ஸாகர, அப்தி, ஜலாட்ய" என்று கடலுக்குரிய பரியாயப் பெயர்களையெல்லாம் அடுக்கினார். பிறகு, "ஸப்த ஸமுத்ர, ஸப்த பர்வத, ஸப்த வன, ஸப்த ஆகாச" என்றார். இன்னும் மலையைச் சுட்டி, "அத்ரி" என்றார். "ஸுமேரு, ஹிமாலய, விந்த்யா, மலய, ருஷ்யமுக" என்றார். வழியில் மலையிலிருந்து தத்தி வரும் ஒரு சிற்றாற்றைப் பார்த்து அவர், "கங்கா, யமுனா, நர்மதா, கோதாவரி, காவேரி, ஸரஸ்வதி" என்று நம் புண்ணிய நதிகளின் பெயர்களையெல்லாம் அடுக்கினார். நம் சரித்திரத்தை ஆராயும்போது பாரதநாட்டின் பூமி வருணனையில் ஓர் ஒற்றுமையைப் பார்க்கிறோம். ஆறு, மலை இவற்றின் பெயர்களைத் தியான சுலோகமாக வகுத்து அதை நம் முன்னோர் மனப்பாடம் செய்தனர். வடக்கே இமயம், தெற்கே நித்தம் தவம் புரியும் குமரியின் முனை, குணக்கிலும் குடக்கிலும் கடல்கள்; வெவ்வேறு நாடுகளாகப் பிரிந்திருந்தும் ஓர் ஐக்கிய உருவில் இந்தியா விளங்கிய தென்பது உண்மையே! அதைப் பக்தியுடன் நாம் போற்றி வந்தோம். அன்றைப் பாரதம் ஆன்ம சாதனையில் சுடு

பட்டு ஒரு பேருண்மையைக் காணத் தாவிற்று. உளமார்ந்த சாதனை தன் இலட்சியத்தை விட்டுச் சற்றும் பிறழாது. அரசியல் சபையில் வேஷம் தரித்துப் பிறரை ஏமாற்றவும் தன்னை ஏமாற்றிக்கொள்ளவும் கூத்தாடிவிட்டுப் போவதைப் போன்றதல்ல அந்தச் சாதனை. அன்றைப் பாரதம் சிந்தனைக் கடலுள் ஆழ்ந்திருந்தும் தொலைவிலுள்ள இக்கிழக்குத் தீவுத் தொகுதியில் இடம் பெற்று, இன்று ஆயிரம் ஆண்டுகள் சென்ற பிறகும் அந்த இணைப்பின் வாசனை இன்னும் நீங்காமல் இந்த அரசரின் நாவில் பக்திச்சுவையுடன் இப்பெயர்கள் மூலம் ஒலிப்பதைக் கேட்டு என் மெய் சிலிர்த்தது. பூகோள விவரத்தில் காணும் இந்தப் பெயர் வரிசை அவ்வரசர் மனத்துள் ஊறிக்கிடப்பது ஓர் அதிசயமன்று. தொன்மையில் இந்தப் பெயர்களில் என்ன அரிய கருத்துக்கள் புதைந்திருந்தனவோ அதை எண்ணும்போது பின்னும் வியப்படைகிறேன். அன்றைப் பாரதம் தன் ஒருமைப்பாட்டை உணர எவ்வளவு அவாவுற்றதோ அதை நிலைநிறுத்தவும் விளக்கவும் என்ன வழியெல்லாம் கண்டுபிடித்தது! இதை இந்தத் தீவுக்கு வந்த பிறகே உணர்ந்தேன். இத்தகைய நாட்டை நம் பாரத பூமி மறந்தேவிட்டது!

அந்த அரசர் நம நாட்டின் மலை, ஆறு இவற்றின் வரிசையை ஒப்பிக்கும்போது, என்ன பெருமை, என்ன உற்சாகம் அவர் முகத்தில் ஒளிர்ந்தது! இந்தப் பூகோள அருணனை அவருடைய சொந்த நாட்டைப்பற்றியதன்று. அவருக்கு ஐரோப்பிய மொழி எதுவுமே தெரியாது. அவர் இந்தக் காலத்துக் கல்லூரியில் படித்தவருமல்லர். 'உலகின் ஒரு மூலையில் பாரததேசம் என்று ஓர் இடம் இருக்கிறது. தங்களை நாகரிக வழிக்கு ஊக்கிய தாயகம் அது' என்ற தெளிவற்ற நினைவை அவர் கொண்டிருக்க வேண்டும். இந்தியாவின் நதி, பருவதங்களை மறக்காமல்

என்ன பக்தியுடன் போற்றினர்! பாரத நாட்டின் பாக்கிய தேவதையைக் குறித்துச் சில வருஷங்களுக்கு முன்னர் ஒரு பாமாலை இயற்றினேன். அதில் விந்திய, ஹிமாசல, யமுனா, கங்கா என்று பாரதநாட்டின்பல பிரதேசம் நதிகள் இவற்றின் பெயரைத் தொடுத்தேன். எனக்கு இப்போது ஒரு யோசனை வருகிறது; நம் நாட்டின் மலை, ஆறு, கடல் இவற்றின் அழகிய பெயர்களை வைத்து ஒரு வருலானை-க் கீதம் ஏன் பாடக்கூடாது? நாட்டுப் பற்று என்ற சொல்லை நாம்இன்று பல இடங்களில் பல விதமாக முழங்குகிறோம். நாட்டின் உயிர்நிலையை உணராதவருக்கு எங்கிருந்து நாட்டுப் பற்று உண்டாகும்?

அரசர் மேலும், "ஸப்த பர்வத, ஸப்த ஸாகர" என்று சொல்லத் தொடங்கினர். அந்தக் காலத்துப் பாரதம், உலகின் பரப்பை எவ்வாறு உணர்ந்திருந்ததென்பதை இது நினைவூட்டுகிறது. இன்று புது அறிவு படைத்த பெருமையில் அப் பழங்கால விஷயங்களை நம் மனத்தை விட்டு அடியோடு ஒழித்துவிடலாம்; ஆனால் புராண இதிகாசங்களில் அவை மறைந்துகொண் டிருக்கின்றன. இன்று தொலைவான இவ்விடத்தில் ஒருவர் குரலில் அவை பக்தியுடன் தொனிப்பதைக் கேட்டேன். அப்பால் அரசர் நான்கு வேதங்களின் பெயரையும் சொன்னர்; எமன், வருணன் போன்ற தெய்வங்களின் நாமங்களை உச்சரித்தார். கண்ணுதற்கடவுளான மகாதேவனின் எட்டுப் பெயர்களையும் ஓதினர். சற்று யோசித்துவிட்டு மகாபாரதத்தின் பதினெண் பருவங்களின் பெயர்களையும் சொல்ல முனைந்தார். ஆனால் சில அவர் நினைவிற்கு வரவில்லை.

'புரி'யை அடைந்ததும் முற்றத்தில் ஒரு மேடைமீது விதம் விதமான சாமான்களை அலங்காரமாக வைத்திருந்தனர். அவ்வூர்ப் பிராம்மணர்கள் நாலு பேர் அங்கே அமர்ந்திருந்தனர்: ஒருவர் புத்த சமயத்தவர், ஒருவர் சைவர், ஒருவர் பிரமனை உபாசிப்பவர், இன்னும் ஒருவர்

திருமாலை வழிபடுபவர். அவர்கள் சென்னிமீது வேலைப பாடுள்ள சடைக்கோப்பம். அதன் உச்சியில் கண்ணாடியால் ஆன சிகரமுகப்பு. அந்நான்கு அந்தணர்களும நெருங்க உட்கார்ந்தவண்ணம், மனத்திற்குள்ளேயே தம தம் கடவுளரின் துதிகளை முணுமுணுத்தனர். பெதும்பை ஒருத்தி, பேதைப பருவத்தாள் ஒருத்தி இவர்கள் அருகில் அர்க்கிய பாத்திரங்களை ஏந்திக்கொண்டு நின்றனர். இவர்கள் பூண்டிருந்த உடைகளும் பகட்டாகவும் விசித்திரமாகவும் இருந்தன. இந்த மங்கலச் சடங்கு என்னை வரவேற்க அரசர் ஏற்பாடு செய்தது என்று பின்னால் தெரிந்தது. என் வருகையினால் ஊருக்குச் சுபிட்சம் வர வேண்டுமென்று அவர்கள் கோருவதாக அரசர் எடுத்துரைத்தார். தாம் விஷ்ணுவின் வமிசத்தைச் சேர்ந்தவரென்பதையும் எனக்குத் தெளிவுறுத்தினார்.

மாலை மணி நாலரை இருக்கும். நான் நீராடிவிட்டு வராந்தாவில் வந்து அமர்ந்தேன். அரசரும கூடவே இருந்தார். பாஷை தெரியாமல் நாங்கள் எதைப்பற்றிப் பேசிக்கொள்வது? வாளா பொழுது போக்கினோம். திடீரென அவர் என்னவோ நினைத்துக்கொண்டு, எனக்கு என்ன தேவை, என்ன உணவு வேண்டும் என்பதை அறிந்துகொள்ளப், பம்பாயைச் சேர்ந்த கோஜா:முஸ்லிம ஒருவனை அழைத்துவர ஆளை ஏவினார். நான் அவருக்கு சமிக்கினை செய்து,என்னைச் சற்றுத் தனிமையாக இருக்க விட்டு, அவர் சற்றுச் சிரம பரிகாரம் செய்துகொள்ளச் சென்றாலே போதும் என்றேன்.

அடுத்த நாள் அவரது மாளிகையில் இருக்கும் பிராமமண பண்டிதர்கள் சிலர் ஓலைச் சுவடிகளுடன் என்னைக் காணவந்தனர். அதில் ஒன்று, மகாபாரதத்தின் பீஷ்ம பருவம்; மேல் வரிசையில் வடமொழிச் சுலோகங்கள்; அதன்கீழ் இந்நாட்டுப் பாஷையில் மொழிபெயர்ப்பும் உரையும் இருந்தன. காகிதப் பிரதியொன்றில் வேறு

ஏதோ சுலோகம் இருந்தது. அதை அரசர் படித்தார். அவர் உச்சரித்த விதத்திலிருந்து அது என்னவென்று ஊகிக்க என்றால் முடியவில்லை. கடைசியில் சற்றுப புரிந்தது. அது யோகதத்துவத்தைப் பற்றியது. 'சித்த புத்தி த்ரி அக்ஷராத்மக ஓம் சந்த்ரபிந்து சுத்த சைதந்ய சுகமாப்நுயாத்' என்ற தொடர்பற்ற பதங்களைக் கொண்டு அதைப் புரிந்துகொண்டேன். "எங்களைச் சேர்ந்த வித்துவானை அனுப்புகிறேன்; சரியான பாடமும் பொருளும் அவர் கூறுவார்" என்று அரசருக்கு ஆறுதல் மொழி தந்தேன்.

என் உடம்போ,மிகவும் களைத்துப்போய்த் துவண்டு விட்டது. இனிமேல், இடம் இடமாகச் சுற்றினால் தாங்காதுபோல் இருக்கிறது. என் நல்ல காலம் சுநீதி என்னுடன் வந்தாரே! அவர் சலிக்காத உழைப்பும் அடங்காத ஆர்வமும் படைத்தவர். பஞ்சகச்சம் உடுத்து அரையில் பட்டுச் சவுக்கத்துடன் 'பெதண்ட', அதாவது இவ்வூர்ப் பண்டிதர் கூட்டத்தில் கலந்துகொண்டார். அவரிடம் பூஜைவிதிகளுக்கு ஏற்ற பாத்திரங்கள் எல்லாம் இருந்தன. நம்முடைய பூஜைமுறைகளை அவர்களுக்கு எடுத்துக் காட்டி விளக்கினார். அவருடைய பேச்சுத் திறமை இதயத்தைக் கவர்ந்து, பின்னும் நம் நாட்டைக் குறித்து அறிவதற்கு அவர்களுடைய ஆவலைத் தூண்டியது.

என்னுடைய உடல்நிலை தாங்காதுபோல் தோன்றவே நான் அரசரின்மாளிகையிலிருந்து 'ஆம்புல்தீர்த்' தக்கரையில் ஓர் அழகிய விடுதியில் வந்து சரண்புகுந்தேன். இங்கே மனிதர் கட்டும் உபசரணையோ விருந்துகளோ எந்தமாதிரி தொந்தரையும் இல்லை. நாற்புறமும் என்னைச் சூழ்ந்து காடு கவிந்த மலைகள், பைங்கிறப் பள்ளத்தாக்குகள், நீராட வரும் பெண்களின் மழலைப்பேச்சொலி

இவைதாம். இலைவாளைக் குடையும் தென்னஞ்சோலையின
சலசலப்பு. நான் வராந்தாவில் என் பாட்டிற்கு எழுது
வதிலும் கற்பனைசெய்வதிலும் பொழுதைப் போக்கினேன்.
எல்லாம் என் விருப்பம்போல் அமையும் சமயம் திடுமென
மோட்டார் ஒன்று என் வாயிலில் வந்து நின்றது. கியா
நயாரின் அரசரும் உலாந்தா நாட்டுப் பிரமுகர் ஒருவரும
என்னைக் காண வந்தனர். தங்கள் ஊருக்கு வரவேண்டு
மென்று அழைத்தனர்; ஓர் இரவாவது தங்கிப் போகு
மாறு வேண்டினர். அப்போது மகாபாரதத்தைப்பற்றிய
பேச்சு வந்தது. இந்தப் பக்கத்தில் கிடைக்கக்கூடிய மகா
பாரத பருவங்கள் இன்ன இன்ன என்பதை அரசர்
சொன்னார். அதன் மிகுதிப் பருவங்களின் பெயரை
என்னைக் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்பினார். இங்கே
வழங்குவதெல்லாம் ஆதி, விராடம், உத்தியோகம்,
பீஷ்மம், ஆசிரமவாசம், மௌசலம்,பிரஸ்தானிகம், ஸ்வர்க்க
காரோகணம் இந்தப் பருவங்களே.

மகாபாரதக் கதைகளின்மீதே இந்நாட்டவரின
சிந்தனைக் கோப்பு எழுந்தது எனலாம். இவர்களுடைய
ஆடல் பாடல், காவியம், ஓவியம், வாழ்க்கை, வழக்கங்
களிலும் இதன் சாயலே அதிகமாகப் படிந்திருக்கிறது.
அருச்சுனன் இவர்களுடைய இலட்சிய புருஷன்: இங்கு
மகாபாரதக் கதை எவ்வளவு உரு மாறிவிட்டதென்பதற்கு
ஒரு காட்டுக் காட்சி இது:— பாரதத்தில் வரும் சிகண்டி
இங்கே ஸ்ரீகாந்தியாகத் திரிந்து விடுகிறாள். ஸ்ரீகாந்தி
அருச்சுனன் மனைவி; பீஷ்மரைக் கொல்ல அருச்சுனனுக்
குத் தேரோட்டியாக வந்து உதவி புரிகிறாள். இந்த
ஸ்ரீகாந்தியைப் பத்தினிக் கடவுளாக இந்நாட்டார் போற்று
கின்றனர்.

கியாநயாரின் அரசர் இன்றிரவு மகாபாரதத்தில்
காணாதொழிந்த பருவங்களைப்பற்றியும் இன்னும் புராண

சம்பந்தமான பல சந்தேகங்களையும் போக்கிக் கொள்ள என்னுடன் கலந்து பேச விரும்பினார். "சுநீதியே இதற்குத் தகுந்த ஆள்; அவரை விடச் சொல்லக் கூடியவர் வேறு எவரும் இல்லை" என்றேன்.

பாரத நாட்டு நிலவருணனை பழங்காலத்தவர் நினைவில் கொண்ட விதமே என் மனத்தில் சுழன்றுகொண்டிருந்தது. நதிகளின் வரிசையில் சிந்து, சதத்ரு போன்ற பெயர்களைக் காணவில்லை. அதேபோல் பிரம்மபுத்திரையும் விட்டுப்போயிருக்கிறது. ஆனால் தென்னாட்டு நதிகளின் பெயர் மட்டும் வருகிறது. இதிலிருந்து, ஒரு சமயம் பஞ்சநதிப் பிரதேசம் சகர், ஹூணர், யவனர், பாரசிகர் இவர்களுடைய ஆதிக்கத்தில் இருந்ததால் நடுவில் பாரதத்தின் தொடர்பு அறுந்துவிட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. பிரம்மபுத்திரை விட்டுப் போனதற்குக் காரணம், அந்நதி பாயும் கிழக்கு நாடு ஆரியாவர்த்தத்துடன் சேராமல் இருந்ததே ஆகும்.

இங்கே நான் கண்ட காட்சிகளின் விவரம் இவ்வளவே. என் உடல் இப்போது உள்ள நிலையைப் பார்த்தால் இப்படியே ஊருக்கு மூட்டை கட்டவேண்டி வருமோ என்றுதான் அஞ்சுகிறேன்.

[ஸ்ரீமதி மீரா தேவிக்கு எழுதிய கடிதம்]

## 11

பலித்தீவு மிகவும் சிறியது. நிறைவும் ஒழுங்கும் கூடி விளங்குகிறது. மரஞ்செடி, ஆறு மலை, கோயில் குடில், வாவி வயல், கடைத் தெரு எல்லாம் அங்கே ஒன்றோடு ஒன்று ஒத்திருந்தன. விகாரமாக எதுவும் கண்ணில் படவில்லை. இதை ஆளும் உலாந்தா நாட்டினர் வெளி நாட்டு ஆலை முதலாளிகளை எந்தவிதமான தொழிலும் நடத்த இங்கே அனுமதிக்கவில்லை. மதப்பிரசாரகர்களின் நடமாட்



பலி நாட்டுப் பெண் நடனம் ஆடுதல்

டமும் இல்லை. அயலார், நிலபுலங்கள் இங்கு வாங்கவே முடியாது. அராபிய முஸ்லிம்களும் குஜராத்துக் கோஜாக்களும் சீனர்களுமே இவ்விடத்தில் வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இத்தீவின் அழகைக் கெடுக்கவோ அமைதியைப் போக்கவோ எந்தவிதமான தொந்தரையும் இல்லை.

கங்கை நதிக் கரையோரம் கடவுள் உறையும் ஆலயங்களோடு போட்டி இடும் சணல் ஆலைகளைத்தான் நம் நாட்டில் பார்க்கிறோம். இந்தத் தீவில் அந்த அட்டூழியம் தென்படவில்லை. கிராம பரிபாலனம், கிராமத்தவர் கையிலேயே இருக்கிறது. இந்நாட்டு உழவும் நீர்ப்பாசனமும் சிறந்த வேளாண்முறையைத் தழுவியவை. மற்ற நாடுகளை விட அதிகமான விளைச்சலைக் காட்டுகிறார்கள். இவர்கள் அதிலும் நெசவுத்தொழிலில் பலவித நிற வேறுபாடுகளையும் வேலைப்பாடுகளையும் பார்க்கலாம். அழுக்கடைந்த ஆடையோ, அநாகரிக உடுப்போ இவர்கள் அணிவதில்லை. இங்கே உற்சவ காலங்களில் மக்கள் திரளாகக் கூடும்போது வெள்ளைக்கோலமாகக் காட்சி தரும். பெண்கள் மார்பை மூடும் வழக்கம் இல்லை. அப்படி எவரேனும் இது அசப்பியமென்று சொன்னால், "மார்பை மறைத்துக் கொள்வதற்கு நாங்கள் கெட்ட நடத்தை உடையவர்களா என்ன?" என்பார்கள். பலியில் விலைமாதர்களே மேலாடை பூணுவாராம்! மொத்தத்தில் இவ்விடத்து ஆடவரும் சரி, பெண்பாலாரும் சரி உறுதியான உடற்கட்டுடன், முகப் பொலிவும் பெற்றிருக்கின்றனர். செழுமையான இயற்கை நிலைக்களனில், கொழுமிய பில்லை நிற ஆனினமும், எதிலும் திருப்தி அடையும் இம்மக்களும் ஒன்றி விடுகிறார்கள். ஓவியனுடைய நோக்கிலிருந்து பார்த்தால் இதைவிடக் கண்ணுக்கினிய இடம் உலகிலேயே அரிதெனலாம்.

நந்தலால்* இங்கே ஏனோ இல்லை என்று எனக்கு

*பிரபல இந்திய ஓவியர்.

வருத்தமாயிருக்கிறது. ஓர் அரிய சந்தர்ப்பத்தை அவர் இழந்துவிட்டாரே! சில ஆண்டுகளுக்கு முன் அமெரிக்காவைச் சேர்ந்த கலைஞர் ஒருவர் பலியைப் போல் ஓர் அழகிய இடம் தாம் இதுவரையில் பார்த்ததே இல்லை யென்று எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். ஒரு கலை வல்லுநரின் நோக்கில் விழக்கூடிய விஷயங்கள் இங்கே மலிந்துள்ளன; உணவுக் குறைவே இராததால் பலி மக்கள் தம் வாழ்விலும், விழாக்களிலும், ஆசார அநுஷ்டானங்களிலும், பாத்திரம் பண்டங்களிலும் கலைத் திறமையைக் காட்டி வெற்றி அடைந்திருக்கின்றனர். ஓரிடத்திலாவது அவலட்சணம் இருக்கவேண்டுமே! ஊர் தோறும் விழாத்தான்; எங்கே பார்த்தாலும் கூத்தும் அபிநயமுமே! பெரும்பாலும் பாரதக் கதைகளை விளக்கும் அபிநயங்களே. நாட்டுப் புறத்திலும் மக்கள் வயிற்றுக்கு நிறைய உணவைத் தேடிக்கொள்வதோடு தம் கலை வாழ்விற்கும் உணவைத் திரட்டிக்கொள்ளுகிறார்கள். வழி துறை எங்கே சென்றாலும் கோயில்கள், சிலை உருவங்கள்! வறுமையின் வடுவே தென்படவில்லை. பிச்சைக்காரன் ஒருவன்கூட என் கண்ணில் படவில்லை. இவ்வழகிய கிராமாந்தரங்களைக் காணும்போது எனக்கு நம் ஸ்ரீநிகேதனத்தின்* நினைவே வருகிறது.

இத்தேசத்து விழாக்களின் முக்கிய அங்கம் கூத்து. இங்கே தென்னஞ்சோலை, கடற்காற்றுக்கு எவ்வளவு அழகாக ஓலை விரித்து ஆடுகிறதோ அவ்வளவு எழிலுடன் ஆடவரும் மடந்தையரும் நிருத்தக் கலையில் உள்ள பற்றினால் ஆடுகின்றனர். ஒவ்வொரு ஜாதியினரும் தம் தம் வழியில் சுய உருவையும் ஆற்றலையும் புலப்படுத்துகின்றனர். வங்க நாட்டின் இதயத்துள் மூண்ட கிளர்ச்சி அதன் உணர்ச்சி மிகுந்த கீர்த்தனையின் வாயிலாக வெளியே

*ரவீந்திரர் நிருமித்த ஓர் அழகிய கிராமம்.

தோன்றியது; இன்னும் அதன் வேகம் அடங்கவில்லை; பலிநாட்டின் உள்ளத்தில் மூண்ட கிளர்ச்சி பலிமக்களின் கூத்து, அபிநயம் இவை மூலமாக அடித்துக்கொள்கிறது; இந்நாட்டின் ஜாத்திரைக் கூத்தையும் அபிநயங்களையும் கவனித்தேன். ஆரம்பத்திலிருந்து முடிவுவரை இவர்கள் அசைவது, உலாவுவது, சண்டை போடுவது, காதல் கொள்வது, கோமாளித்தனம் செய்வது இவை போன்ற சுவைகளை விதம் விதமான ஆடல்களில் புகுத்திக் காட்டுகிறார்கள். இந்த ஆட்டத்தின் உட் கருத்தைப் புரிந்துகொண்டவர்களாலேயேதான் ஒருவாறு கதையின் போக்கைப் பின்பற்ற முடியும். அன்று அரசமாளிகையில் ஒருவிதக் கூத்தைப் பார்த்தேன். அந்த அபிநயம் 'சாலியன் - சத்தியவதி' இவர்கள் கதையின் பொருளைக் கொண்டதாம்; இது பின்னால் தெரியவந்தது. வெறும் பாவங்களை மட்டும் காட்டவில்லை இவர்களுடைய நிருத்தியங்கள். வருணனைகளையும் கூத்தின் உருவில் நம் கண்முன் நிறுத்துகின்றன. மனிதனுடைய செயல்கள் யாவும் அவனுடைய உடல் அசைவுகளால் வெளிப்படுகின்றன. எளிதில் செய்ய இயலாத ஒரு காரியத்தைச் சந்தத்திற்கு இசைந்த பாட்டின் மூலமாக வெளிப்படுத்த முடியும்; இவர்களோ குரலுக்கு (பாட்டிற்கு) முதல் இடம் கொடுப்பதைக் குறைத்துக்கொண்டு சந்தத்தோடு இசையும் உடல் அசைவுகள் மூலம் நிருத்த உருவில் பாவத்தை வெளிப்படுத்துகின்றனர். புராணக்கதை காவிய வடிவில் வரும்போது வெறும் காதுக்கு இனிய விஷயமாக அமைகிறது. இவர்கள் அதையே கண்ணுக்கினிய நடனமாக மாற்றுகின்றனர். வாக்கியமே காவியத்தின் வாகனம். அந்த வாக்கியத்தில் தொனிக்கும் சந்தக்குறிப்பு இசையின் பாற் படுவது. ஆனால் அதற்குள்ள அர்த்தப் பகுதி உண்மைக்கு அவசியமற்றது. சிலருடைய மனத்திற்கு அது உவகை ஊட்டக்கூடியதாய் இருக்கலாம். தொடரும்

ஏற்றவாறு நடையும், முகபாவனையும் அமைவதாயிருந்
தால் விகாரமாகத் தோற்றுமல்லவா? நாடகத்தைக் காண
வருவோரை மேல்நாட்டார் 'ஆடியன்ஸ்' என்கின்றனர்.
இதற்குச் செவிகொண்டு கேட்பவர்கள் என்பது பொருள்.
ஆனால் இந்தியாவிலோ நாடகம் என்பது காவியத்தை
ஆதாரமாக வைத்துக் கண்ணால் அதன் சுவையை நுகர்
வதற்கான அபிநயமாகக் காட்சியளிக்கிறது.

அபிநயத்தைத் தவிர, நடனத்தையும் இங்கே காண
லாம். நேற்றிரவு ஜோக்யார் அரசமாளிகையில் அதைப்
பார்த்தேன். அழகிய வேடம் புனைந்த சிறுமியர் இருவரின்
கிரீடத்தில் செருகியிருந்த பூந்துணர், அவர்கள் அசையும்
போதெல்லாம் குதித்தது. 'காமெலான்' வாத்தியத்திற்கு
இசைய இருவரும் ஆடத் தொடங்கினர். இந்த இசைக்
கருவி நம்முடைய சங்கீதத்திற்கு ஏற்றதேயன்று. ஜல
தரங்க வாத்தியத்தை நாம் ஒரு குழந்தையின் விளையாட்டுச்
சாமான் என்றே கருதுகிறோம். ஆனால் இந்தக் காமெலான்
ஆழ்ந்த ஓசையுடன் விரிவான சுரஸ்தாயிகள் கொண்டு
பல தாள ஜதிகளைத் திறபடக் காட்டும் அற்புதக் கருவி.
நம்முடைய இராகங்களில் வரும் சுரமூர்ச்சனைகளை இது
காட்டாது. மிருதங்கத்தின் காட்டும் ஜதி வரிசைகளையும்
ஒலி உருட்டல்களையும் ஒத்து இருக்கின்றன, இதன் தொனி
அலைகள். இவர்களுக்குக் கைத்தாளமும் உண்டு. சிறி
யனவும் பெரியனவுமான வெண்கல மணிகள் இவர்கள்
வாத்தியங்களின் முக்கிய அம்சங்களாகும். நம்முடைய
நாடக அரங்கில் 'கான்ஸர்ட்' என்று புதிதாக வந்திருக்
கிறதே அது போன்றதும் அன்று இது. ஐரோப்பிய
இசைக் கருவிகள் சேர்ந்து பல தானங்களை இயக்கும்
இலய ஓசையும் இதில் உண்டாகவில்லை. நடு நடுவே
முக்கியமான சுரத்தைக் காட்ட மணியின் நாதம் கேட்
கிறது. பலவிதமான சுரக்கூட்டை மற்றத் தரங்க
வாத்தியங்கள் கறங்கி ஓர் இசைச் சிற்பத்தை நிறுத்து

இங்கே கண்டேன். இந் நாட்டுப் பெண்பாலார் உடலில் அணிகலமே இல்லை. ஓரிருவர் கையில்மட்டும் வளையல்கள் இருந்தன; அவை பொன்னால் ஆனவையன்று. பனையோலைச் சுருளைத் தோடாகக் காதில் அணிந்துகொண்டிருக்கிறார்கள். அஜந்தா ஓவியங்களில் இதுபோன்ற காதணியைக் காணலாம். பொன் வைர நகைகளில் மோகம் இராத இவர்கள் மற்ற எல்லா விஷயங்களிலும் அலங்காரங்களைக் காட்டுவதுதான் வியப்பினும் வியப்பு! பாறையிலும் மரத்திலும் துணிமணிகளிலும் உலோகத்திலும் இவர்கள் இயற்றும் சித்திர வேலைகள் உலகப் பிரசித்தமானவை. ஆனால் இந் நாட்டு மகளிர் மேனிக்குச் செவ்வியூட்டப் பூண் ஒன்றேனும் இல்லை. நம் நாட்டில் சாதாரணமாக அலங்காரப் பொருள்கள் பழமைக்குப் பேர்போன நகரங்களில்தாம் செய்யப்படுகின்றன. அதுவும் இந்து முஸ்லிம் நாகரிகம் நிலைபெற்ற காசி, மதுரை, டாக்கா, தில்லி, ஆக்ரா போன்ற இடங்களில்தாம். இங்கோ அவ்வாறில்லை. கைத்தொழிலும் சிற்ப வேலையும் இந்நாட்டில், எங்கேயும் எல்லாரிடமும் பரவியிருப்பதைக் காணலாம். இங்கே தம் இன்பத்திற்காகவே இந்தத் தொழில்களைச் செய்கின்றனர். ஒப்பாவியரிடத்திலும் இந்தப் பண்பைக் காணலாம். இது குறுகிய தீவு. எந்தவிதமான யுக்தியும் கலைத்திறமையும் மக்களிடையே பரவுவதற்கு அதிக நாட்கள் வேண்டியதில்லை. அதோடு இந்த மக்களிடையே ஜாதி ஒற்றுமை நிலவுகிறது. தீவு வாழ் மாந்தரிடையே ஒரு தனிப்பண்பு; நாற்புறமும் கடல் சூழ்ந்திருப்பதால் தமக்குள்ள அரிய திறமைகளை ஒன்றாகத் திரட்டிக் காத்துக்கொள்ள இவர்களுக்கு வசதி இருப்பதே. பரந்த நம் பாரத பூமியில் மிதமிஞ்சிய கலைப் பொருள்கள் சிறிது காலத்திற்குள்ளேயே தம் மதிப்பை இழந்து வீணே சிதறுண்டு போகின்றன. அஜந்தா இருக்கிறது; ஆனால் அந்த ஓவியக்கலை அஜந்தா

காலத்திலேயே கட்டுண்டு கிடக்கிறது. ஒரிஸ்ஸாவிலுள்ள கோனார்க்கைப் பாருங்கள்: அதன் சிற்ப காலத்தோடேயே அது நின்று விடுகிறது. அக்காலத்துக் கலைப் பண்பே இன்றுவரை தொடர்பாக வந்திருக்கிறதா? தத்துவமும் சமயமும், பாரத நாட்டினரின் உரிமைச் சொத்து. உபநிடதமும் சங்கரரின் அத்துவைதமும் தோன்றி எத்தனை காலமாயின; நாம் அவற்றை எண்ணிய பெருமைதான் கொள்கிறோம். ஆனால் அத்தகைய சிந்தனையின் ஆழம் இன்று நம்மிடையே தோன்றுகிறதா? இந் நாட்டின் பாரதத்தின் தொடர்புவிண்டு எத்தனையோ ஆண்டுகளாயின! நம் கலையின் சின்னங்கள் இங்கே பல இடங்களில் அழியாமல் எஞ்சி நிற்கின்றன. காரணம்: இது ஒரு தீவு. எந்தவிதமான பொருளும் இங்கே மறைந்து போகாது. பணம் போய்விடக்கூடும்; பொருளாதாரம் மாறக்கூடும்; கலை மட்டும் சாவதில்லை. பாரத பூமியின் கலைச் செல்வங்களை அவற்றின் கலப்பற்ற உருவிலேயே இங்கே பார்க்க முடிகிறது. இவர்கள் பயிலும் கூத்தும் அபிநயமும் ஒருவேளை நம் புராதனக் கலையின் விட்டுப போன பகுதிகளாக இருக்குமோ? இந் நாட்டு அரசர்கள் தம்மை 'ஆரியர்' என்று கூறிக்கொள்கின்றனர். இங்கே நடக்கும் வேடிக்கை விழாக்களை ஆராயப் புகின் மறைந்துபோன நம் நாட்டுப் பழக்கவழக்கங்கள் எத்தனை வெளிப்படுமோ!

இச் சிறிய தீவில் ஒரே காலத்தில் பல அரசர்கள் இருந்திருக்கிறார்கள். டச்சுக்காரர் ஆட்சிக்கு அடங்கிப் போகப் பலருக்கு விருப்பமில்லை. இவ்வீர மக்கள் தற்கொலை புரிந்துகொண்டு ஆயிரக்கணக்கில் மாண்டனர். இன்றும் பெயரளவில் 'ராஜா' என்ற பட்டம் தரிப்பவர் சிலர் இருக்கின்றனர். பழைய குத்து விளக்கோடு இவர்களை ஒப்பிடலாம். சுடர் விடுவதற்குத் திரியோ எண்ணெயோ இருந்தால்தானே! சித்திர மாடமும், மங்கல வெறுக்கை

யும் இன்னும் சிலருக்கு இருப்பதைக் காணலாம். இவர்கள் வசிக்கும் 'புரி' யை நகரென்றே கூறத் தகும். ஆனால் இத்தகைய நகரங்களுக்கும் மற்றக் கிராமங்களுக்கும் இடையே உள்ள வேற்றுமை உடன் பிறந்த அண்ணனுக்கும் தம்பிக்கும் உள்ள வேற்றுமை போலத்தான். பிரிக்கச் சுவர் எதுவுமே இல்லை. இன்றைய பாரதத்திலோ நகர் ஒரு மூலை, நாடு ஒரு மூலை. எந்தத் துறையிலும் இவை ஒன்றுக்கொன்று இசைந்திருக்கவில்லை; நகரங்களில் எரியும் கொள்ளையான விளக்கொளி கிராமாந்தரங்களில் கவிந்திருக்கும் இருளைச் சற்றாவது விலக்குகிறதா? தேசத்தின் செல்வம் பல கூறுகளாகப் பிரிந்து வீணாகப்போகிறது. இதில் கிராமத்திற்குக் கிடைக்கும் பங்கு அதன் வளர்ச்சிக்குப் போதாது. நம் நாடு ஓர் ஒற்றுமையுடன் எந்த அருங்கலையையும் எந்தத் தொழிலையும் காப்பாற்றவோ, அபிவிருத்தி செய்யவோ முடியாமல் திண்டாடுகிறது. நகரவாசி தேச முன்னேற்றம் என்றதும், தான் வாழும் கட்டடக் காட்டிலேயே பணி ஆற்றுகிறான். கிராம மக்களோ, தேசம் என்றால் எதைக் குறிக்கிறதென்பதையே உணராதவர். மோட்டாரிலேயே இந்தப் பலித்தீவு முழுவதும் சுற்றியாகிவிட்டது. அதன் ஆறுகள், மலைகள், காடுகள், பயிர்ப்பண்ணைகள், கிராமங்கள், நகரங்கள் அனைத்தும் நெருங்கிய உறவு கொண்டு விளங்குகின்றன. இங்கு வாழும் மக்கள் அத்தனை பேரிடமும் அதன் ஐசுவரியம் பரவிக் கிடக்கிறது.

'காமெலான்' என்ற இசைக் கருவியைப்பற்றி முன்பே கூறியுள்ளேன். அந்த இன்னியத்தை ஆராய்ந்த பிறகு எனக்கு ஒன்று விளக்கமாயிற்று. இவர்கள், மனத்திற்குத் தெம்பு வரும்போது இனிய பாட்டுக்களைப் பாடாமல் இருப்பதற்குக் காரணம், குரலில் நயமிராத குறையே. 'டிங் டுங் டாங்' என்று இவர்கள் தம் வாத்தியங்களில் எழுப்பும் ஓசையில் இசையின் இலட்சணமே

இல்லை; தாளம் மட்டும் இருக்கிறது. பல வாத்தியத் தொகுதிகளைக் கறங்கித் தாளச் சொற்களை எழுப்புகின்றனர். தாளச் சொற்கள் பேசுவதற்குத் தவில், தக்கை போன்ற தோற்கருவிகளையும் உபயோகிக்கின்றனர். இவற்றில் ஒலிக்கும் சுர அம்சம் மிகக் குறைவு; தட்டோசை அதிகம். உலோகத்தகடு, தந்தி இவைகளால் ஆகிய வாத்தியங்களும் இருக்கின்றன. அவற்றில் சுரம் சுத்தமாகப் பேசுகிறது. தட்டு வாத்தியத்தில் சுரம் நின்று ஒலிக்காது; அப்படி இருக்கவேண்டிய அவசியமும் இல்லை. ஏனென்றால், சுரங்களை இழுத்து வாசிப்பது பாட்டிற்குத்தான் முக்கியம். விட்டு விட்டு எழும் சுரங்களே தாளத்தின் சொற்களை உச்சரிக்கும். உண்மையில் இவர்கள் பாடுவது தாளக் கொண்டல்ல; அவயவங்களைக் கொண்டுதான். இவர்கள் அடிபோடுவது சுரங்களை அழுத்தி, கமகமாய்ப் பிடிப்பதை ஒத்திருக்கும். இது சிமை நர்த்தனத்தில் தென்படும் துள்ளல் வகையைப் போன்றதும் அல்ல. இவர்கள் புரியும் நடனத்தைத் துளித்துளியாகச் சொட்டும் மழைத்தாரையோடு உவமிக்க முடியாது; சல சலத்து ஓடும் அருவியின் அழகைப் போன்றது இது. தாளத்தில் தென்படும் இலயம், அதன் அட்சர காலங்களை இணைப்பதனால் உண்டாவது; பாட்டில் உலவும் இலயம் அதன் சுவையின் நிறைவான சேர்க்கையே. அதனால்தான் இவர்களுடைய சங்கீதத்தைத் தாளம் என்கிறேன்; இவர்கள் நடனத்தைப் பாட்டென்கிறேன். நம் நாடு, ஐரோப்பா இந்த இரண்டிலுமுள்ள இசையும் அபிநயமும் சேர்ந்தவை இங்கே உள்ள நாட்டியமும் அபிநயமும்.

இதற்குள் இங்கே இருக்கும் உலாந்தா நாட்டு அதிகாரிகளுடன் பழக எனக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. இவர்களிடம் ஒரு தனிக் குணம் தென்படுகிறது. தம் கீழ்வாழும் மக்களைப் பிரபுக்கள் மாதிரி அடக்கி ஆள்கிறார்

கள். ஆனால் தனிப்பட இவர்கள் [illegible], செருக்கோ கொண்டவர்களாகத் தெரியவில்லை. இங்குள்ள ஜனங்களுடன் சகஜமாகப் பழகுகிறார்கள். விவாகக் கலப்பும் வைத்துக்கொள்கிறார்கள். இப்படிப் பிறக்கும் சந்ததியைப் புறக்கணிப்பதில்லை; சமூகத்தில் ஏற்கின்றனர். இங்கே உயர்ந்த பதவியில் இத்தகைய கலப்புவர்ணத்தவர் எத்தனையோ பேர் இருக்கின்றனர். மனிதரை, மனிதராக எண்ணி நடத்துகின்றனர். "இதைச் செய்ய எவ்வாறு உங்களால் முடிந்தது?" என்று நான் கேட்ட கேள்விக்கு உலாந்தாக்காரர் ஒருவர், "படைப்பலம், யுத்தத் தளவாடங்கள், பிரத்தியேக சலுகை, செல்வக் களஞ்சியம் உலகில் எந்த மூலையிலும் சாம்ராஜ்யம் ஸ்தாபித்து ஆளும் தகுதி இவற்றைப் பெற்றிருக்கும் மகாநுபாவர்களே நாம் உயர்வான இனத்தைச் சேர்ந்தவர் என்ற நினைப்புடையவர். தோரணவாயில் வழியாகத் தலைதூக்கி வெற்றியுடன் செல்பவர்களுக்குக் குறுகிய திட்டி வாசலில் வணங்கிய கழுத்துடன் நுழையத் தெரியாது. பெரிய பேர்வழிகள் நாம் என்று யோசனை செய்வதற்குக்கூட எங்களுக்கு அவகாசமில்லை. இதனாலேயே எங்கும், எல்லா விஷயத்திலும் நாட்டம் செலுத்த முடிகிறது; தாராளமாகப் பழகச் சௌகரியமும் ஏற்படுகிறது.

[ஸ்ரீ ரதீந்திரநாத் டாகுருக்கு எழுதியது.]

## 12

பலித்தீவில் கடைசி நாள். புண்டுக் என்ற ஒரு குன்றின் மீதுள்ள பங்களாவில் இருக்கிறேன். இத்தனை நாள் பலியில் நான் சுற்றிப்பார்த்த இடங்கள் யாவும் பயிர்ப் பண்ணைகளும் மக்கள்வாழும் பகுதியுமே. தெங்கு, கமுகு, புளி, முருங்கை மரங்களின் பசுமையான நிழல்

இந்தத் தடவை எவர் பொருட்டு இந்தக் கிரியைகளெல்லாம் நடக்கின்றனவோ, அவருடைய ஆன்மா அமர வாழ்வு எய்தியிருக்குமென்பதில் அவருடைய உற்றார் உறவினர்களுக்குச் சிறிதேனும் ஐயமில்லை. இதைப்போல் ஓர் ஆடம்பரமான சவச்சடங்கு நடந்து பல ஆண்டுகள் ஆயின. இதைப்போல் ஒரு விழா திரும்பவும் வருமா என்று சந்தேகப்படுகிறார்கள். ஏனென்றால், இந்தப் புது யுகம் கையில் கட்டாரியுடன் எந்த அழகைக் கெடுக்கலாம், எந்த நாகரிகத்தை வீழ்த்தலாம் என்று திரிகிறதே! வேண்டிய அளவுக்குமேல் பொருள் உற்பத்தி செய்யும் ஒரு காரியத்தில் மட்டுமே இதற்கு முழு உற்சாகம்.

இங்குள்ளவர் மதிப்பின்படி, இந்த விழாவுக்குச் செலவாகும் தொகை இவ்வூர் வெள்ளி ரூபாயில் 40 ஆயிரத்துக்குமேல் இருக்குமாம்—நம் ரூபாயில் ஐம்பதினாயிரம்! இது அதிகச் செலவென்பதே சிலருடைய கொள்கை. நம்முடைய நாட்டில் மனிதர்களின் சிராத்தக் கிரியைக்குச் செலவாகும் தொகைக்கு எதிரே இந்த ஐம்பதினாயிரம் எந்த மூலை? ஆனால் ஒரு வித்தியாசம்: நம் நாட்டில் வீண் ஆடம்பரத்திற்காக இவ்வளவு பணம் விரயமாவதில்லை. இந்தத் தொகையில் பெரும்பாகம் ஏழைமக்களுக்குச் செய்யும் தான தருமமாகவே இருக்கிறது. மறுமையில் பிரேத ஆன்மாக்களின் நலனைக் கோரியே இவ்வளவு பணத்தை வாரி இறைக்கிறார்கள். இங்கேயும், சிராத்தத்தின்போது இவ்வூர்ப் பிராம்மணர்களுக்கும் பண்டிதர்களுக்கும் அர்க்கியம், ஆகாரம்போன்ற தானங்களை வழங்குகின்றனர். ஆனால் இது எம்மாத்திரம்? அலங்காரத்திற்கும், வெளிப்பகட்டான காரியங்களுக்குமே அதிகம் செலவாகிறது. அழுகிப்போகக்கூடிய உடலைச் சுட்டுப் பொசுக்க இவர்கள் உள்ளூற விரும்பவில்லை யென்றே தெரிகிறது. கறுப்பு எருதுபோல் செய்த வாகனங்களின் வயிற்றினுள் பிணத்தை வைத்து அதைத் தெருத்தெருவாகச் சுமந்து

செல்கின்றனர். இந்த ஊர்வலத்தில் கட்சிச் சண்டை
கூட மூள்கிறது—கொளுத்தவேண்டுமென்று ஒரு கட்சி
சொல்லும்; கூடாதென்று இன்னும் ஒரு கட்சி சொல்லும்.
பிணந்தூக்கிகளின் பாடுதான் திண்டாட்டம். இவர்கள்
தழுவும் ஆகமநெறி வெளிநாட்டிலிருந்து வந்தது. ஆனால்
நடை முறையில் அதைப் பின்பற்றுவதில்லை. இவர்களு
டைய ஜாதி வழக்கங்களுக்கும் இது முரணாக நிற்கிறது.
ஆனால் கடைசியில் ஆகம நெறியே வெற்றி பெறுகிறது.
நாற்ற உடல் கனலுக்கு இரையாகிறது; சண்டையும்
ஓய்கிறது.

உபுத் என்ற இடத்தில் அரசரின் வீட்டில் இந்தச்
சிராத்த முறைப்படியே எல்லாம் நடந்தன. சுநீதி பெரிய
வைதிகர், சாஸ்திரி என்று நன்றாகத் தெரியும். இதைப்
போல் ஓர் ஆடம்பரமான சிராத்தக் கிரியை மீண்டும்
இந் நாட்டில் தோன்றுவது அரிதென எண்ணி, குறை
வின்றி நடத்தச் சுநீதி இதில் கலந்துகொண்டு வேத மந்
திரங்களை ஓதினால் தமக்குப் பரமதிருப்தி ஏற்படுமென்று
அரசர் சொன்னார், சுநீதி மறையவர் கோலம் பூண்டு,
ஆசனத்தில் அமர்ந்து, "மது வாதா ரிதாயதே" என்ற
இருக்குகளை ஓதிக் கடோபநிடதத்திலிருந்து சில சுலோ
கங்களை மொழிந்து சடங்கை நிறைவேற்றி வைத்தார்.
எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஒரு நாள்
இதே தீவில் வேத கோஷம் இதைப் போன்றதோர்
சந்தர்ப்பத்தில் தொனித்திருக்குமென்றே நினைக்கிறேன்.
இடையில் எத்தனை கால மாறுதல்கள் தோன்றி மறைந்
தனவோ? புரோகிதம் செய்து வைத்ததற்கு என்ன சம்
மானம் கொடுப்பதென்று அரசர் சுநீதியைக் கேட்டார்.
"உண்மையில் அந்தணன் எவனும் இந்தப் புனிதச்
சடங்கைச் செய்வதற்குத் தட்சிணை வாங்கவே மாட்டான்.
அது தருமத்திற்கே விரோதமானது" என்றார் சுநீதி.
வேலையெல்லாம் முடிந்ததும் அரசர் அவருக்குப் பலியில்

செய்த மிக மதிப்புள்ள ஆடையும் அழகிய ஆசனமும் தானமாக வழங்கினார்.

இங்கே ஒரு விந்தையான வழக்கம் உலவுகிறது. குடும்பத்தில் இளையவர் யாராவது மரித்துப் போனால் அவர்களுக்கு உடனேயே அந்திமக் கிரியை செய்வதில்லை. அக் குடும்பத்தைச் சேர்ந்த முதியவர் ஒருவர் இறந்து அவருக்குச் செய்யும் கருமாதிகள் முடிந்த பிறகே, மரித்த இளையவரைத் தகனம் செய்வது வழக்கம். அதுவரை அவனுடைய சவத்தைப் பத்திரப்படுத்தி வைப்பார்களாம். இந்த மாதிரி பலபேருடைய தகனக்கிரியைகளை ஒரே காலத்தில் நிகழ்வதில் வியப்பு ஒன்றுமில்லை.

ஆண்டுக் கணக்கில் இந்தச் சடங்கை ஒத்திப் போடுவதற்குக் காரணம், ஏராளமான பணச் செலவு ஆகுமென்று தயங்கித்தான். மேலும், இதை நடத்தக் கணக்கற்ற பொருள்களைச் சேகரிக்க வேண்டும்.

சவ வாகனங்களை ஏந்திச்செல்வதற்குத் தேர்போன்ற விமானங்களை அமைக்கிறார்கள். எத்தனையோ பேர் கூடி அதைத் தோளில் கொண்டு வைப்பார்கள். இந்த விமானத்தை 'ஒதர்' என்பார்கள். நம் நாட்டில் ஓடங்களுக்கு மயில் முகம் எவ்வாறு அமைக்கிறார்களோ, அதேபோல் இந்த 'ஒதர்' வின் முகப்பையும் பெரிய கருடனுடைய முகத்தைப்போல் அமைக்கின்றனர். அதற்கு இருபுறமும் பெரிய அளவில் சிறகுகள்; இவை [illegible] கலை நுட்பம் வாய்ந்தவை. ஊர்வலத்தில் உபயோகமாகும் ஒவ்வொரு பொருளையும் வருணிப்பது இயலாத காரியம். இப்போது கண்ணைக் கவர்ந்து உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் காட்சி வரிசை வரிசையாகச் செல்லும் ஜனத்திரளே, தலைமேல் எத்தனை விதமான காணிக்கைகளை ஏந்திக்கொண்டு வருகிறார்கள்! தொலைவிலுள்ள கிராமாந்தரங்களிலிருந்து இவர்கள் வந்தபடியே இருக்கின்றனர். இந்தப் பெரிய விழாவை முன்னிட்டுக் கிராமங்

கள் எங்கும் ஆட்டவிழாக்கள் நடைபெறுகின்றன. இளை னிழல் பரப்பும் மரங்களின கீழும் மன்றங்களிலும் வாத்தியங்கள் முழங்குகின்றன. பாமர மக்கள் தம்மால் இயன்ற பொருளை வேதிகையின் அருகில் வைத்துவிட்டுச் சென்றனர். ஆறுபோல் பெருகிவரும் காணிக்கைச் சாமான்களை இவர்கள் அடுக்கி வைப்பதே தனி அழகோடு விளங்குகிறது. அன்று இயாங் இயாங் என்றவர் அரசர் பல ஊர்திகளின்மேல் ஏற்றித் திரவியங்களை அனுப்பி வைத்தார். இவற்றின் பின்னுல் அரசரின் அந்தப்புரப் பெண்மணிகள் வந்த காட்சி மிக அற்புதம்! உயர் குலத்தைக் காட்ட அவர்கள் உடையில்தான் என்ன நிறவேறுபாடு! அவர்கள் நடையில்தான் என்ன ஒயில்! உடலில்தான் என்னவனப்பு! முகத்திலேதான் என்ன பொலிவு! வழி நெடுக எங்கும் ஒரே வருணக் குழப்பம் - கண்ணுக்குச் சலிப்பே ஏற்படவில்லை.

எல்லாவற்றையும்விட ஒன்று என் மனத்துள் பதிந்தது. ஜனங்கள் திரளாகக் கூடி வேடிக்கை பார்க்கவரும் விழா அல்ல இது. பல்வேறு கிராமங்களில் எத்தனையோ இல்லங்களில் இந்தக் கொண்டாட்டத்தையே தம்தம் வழியில் நிறைவுபடுத்தினர். இன்னியங்களை ஒலித்து இந்த உற்சவத்திற்கு உயிரை ஊட்டினர். ஓரிடத்திலாவது அலட்சியமோ அவலட்சணமோ தென்பட வேண்டுமே! ஜன நெருக்கம் இருந்தாலும் கலகமோ குழப்பமோ சிறிதும் தென்படவில்லை. கும்பலில் பெண்களின் எண்ணிக்கையே அதிகம். அதனுல் முறை தவறி எதுவும் நடக்கவில்லை. பலபேர் குழுமும் இடத்தில், பழுதாகாத ஓர் அழகின் மலர்ச்சியும், திருவமர் ஒரு நாகரிகத்தின் உயர்வும் வீற்றிருப்பதைக் கண்டேன். இங்கே ஒழுங்கைப் பாதுகாக்கச் சிவப்புக் குல்லாய்ப் போலீஸ்காரனே தென்படவில்லை. உளமார்ந்த மகிழ்ச்சியுடன் மனிதர் கூடுமிடத்தில் எந்த விதமான தீங்கும் நேரிடா

தென்பதோடு தம் இதயத்துள்ளேயே அழகின் ஒளியைக் கண்டவர் ஒன்று சேரும்போது உயர்ந்த வகைப் பண்புதான் வெளிப்படும். இந்தச் சால்புணர்வு நம் நாட்டிலும் தலை எடுக்கவேண்டுமென்பதே என் விருப்பம். இச் சிறு தீவகத்தில் பாதையோரமெல்லாம் நான்கண்ட காட்சிகள் அற்ப விஷயங்களா என்ன? எத்தனை நாள் உழைப்பு வேண்டும் இவை உருவாவதற்கு! எத்தனை சிக்கல்களெல்லாம் விலகிச் சரிப்படவேண்டும்! கூட்டம் கூடுவது எளிதான காரியம்; ஆனால் ஒன்றுபடுவதுதான் கடினம். உழைப்பும் தியாகமும் சேர்ந்தால்தான் இந்த ஒற்றுமை உணர்ச்சி பிறக்கும். ஆற்றலை வெளிப்படுத்தினால்தான் உள்ளத்துள் தூர்ந்து கிடக்கும் மாசுகள் விலகி ஊற்றுப் பெருக்குத் தானாகவே கிளம்பும்; அடியிலுள்ள கூழைக் கற்கள்வரை தெளிவாகவே இருக்கும். நம்மிடையே பல தவசிகள், ஞானமும் கருமமுமே சாதனைக்குப் போதுமானவை என்று நினைக்கிறார்கள். ஆனால் இறைவன், தம் படைப்புத் தொழிலின் வாயிலாக, வெறும் இயல்பாக வளர்ந்த அறிவின் திண்மைசெயலாகி விடாது. சுவையே படைப்பு வேலையின் முடிவான கருத்து. என்பதைத் தெற்றென விளக்கிவிட்டார். பாலை நிலத்தின்கண் தென்படுவது ஆக்கத்தின் எதிரிடையான அழிவின் சக்தியே. வறட்சியில் அதன் வன்மை தோன்றுகிறது. சுவையின் நீர்மை அங்கே கசியத் தொடங்கியதும், அந்தச் சுவையின் தன்மையால் பாலையில் அடங்கியுள்ள சக்தி புல்லைப் படைக்கிறது; பூவைத் தருகிறது; கனியைச் சொரிகிறது. நலனும் அழகும் கூடி, வெம்பிய பாலை கவின் இனிய கானமாய் மாறி விடுகிறது.

எட்டு மணி அடித்ததும், வராந்தா எதிரே இரண்டு மூன்று மோட்டார்வண்டிகள்வந்து நின்றன. சுரேந்திரனும் சுசீதியும் சேர்ந்து பெட்டி பேழைகளையும் மூட்டை முடிச்சுக்களையும் வண்டிகள் நிறைய ஏற்றினர். ஒரு சாரார்

முன்னதாகவே கப்பல் துறைக்குப் புறப்பட்டு விட்டனர். அருகிலுள்ள மலையை மூடியிருக்கும் காட்டின் பசுமை மீது வெயில் படிந்திருந்தது. தொலைவில் தெரியும் மலைச் சிகரம் நீலமணிபோல் பனிமங்கலில் மின்னியது. தென்பக்கமாகக் குன்றின் சரிவில் தென்பட்ட கடலின் துண்டு கண்ணாடியை ஒத்திருந்தது. அதன் அண்மையிலேயே மலையோடு ஒட்டிய கிராமத்தின் இருண்ட காவினுள் கமுகின் பச்சோலைகள் காற்றில் மெல்ல அசைந்தன. ஊறலிலிருந்து பெண்கள் குடங்களில் நீர் மொண்டு திரும்பிக் கொண்டிருந்தனர். கீழே பள்ளத்தில், வயல்களைத் தாண்டி, எதிரே நிமிர்ந்து நிற்கும் குன்றின் வளைவில் மனிதர் குடியிருப்பு கண்ணில் பட்டது. தென்னை மரங்கள் மேகமிராத வானை நோக்கி அஞ்சலியாகத் தம் ஓலைக் கரத்தைக் கூப்பி, விரித்து வெய்யோன் பொழியும் கதிரை உட்கொள்ளும் காட்சி உள்ளத்தைக் கவர்ந்தது.

இந்த இடத்திலிருந்து விடை பெற்றுக் கிளம்பும் சமயம் ஓர் எண்ணம் எழுகிறது. கண்ணுக்கு இனிய தீவு தான் இது. இங்குள்ளோரும் நல்லவர்தாம். ஆனால் இங்கே கூட்டை அமைத்துக்கொள்ள என் மனப்பறவை விரும்பவில்லையே! கடலுக்கு அப்பாலுள்ள என் பாரத பூமி அழைப்பது என் இதயத்துள் ஒலிக்கிறது. இளமைப் பருவந் தொட்டு, இந்தப் பாரதத்தின் மூலமாக உலகின் விசித்திரத்தைக் கண்டதனாலேயே ஏற்பட்டதன்று இந்த நெருக்கம். என் தாய் நாட்டின் வானும் வளியும் ஒளியும் அதன் ஆற்றங்கரையோரம் திகழும் இயற்கை வளனும் என்றென்றும் என் மனத்தை மயக்கிவிட்டன. நான் அந்த இடத்தில் பெற்ற துயருக்கோ அளவில்லை. என்னைச் சுற்றிலும் எங்கே பார்த்தாலும் வறுமையும் பிணியுமே. இவற்றையெல்லாம் மீறி அதன் வானில் காலங் கடந்ததோர் உண்மையின் வாக்கு எதிரொலியுடன் முழங்குகிறது. விடுதலை வருவதன் முன்னறிவிப்பு அது. பாரத

பூமியின் கீழ்மட்டத்தில் சமயச் செருக்கு, சாதிச் சண்டை, இழிவு மனப்பான்மை, பொறாமை, சூது வாது போன்ற வெட்கக்கேடான விஷயங்கள் மலிந்திருத்தல் போல் எங்குமே இரா. அதன் மேல்மட்டத்தில் பரந்த கொள்கைகள், உயர்ந்த இலட்சியங்கள், எதையும் திறந்த மனத்துடன் விட்டுக்கொடுத்து உலகத்தவரை அமுதன்ன அணைக்கும் ஒரு பொறை இவை யாவும் நம் நாட்டில் காணலாம். இன்று என் மனத்துள் மாசற்ற இந்த வைகறைப் பொழுதில் என் தாயகம் இருக்கும் திசையே ஒளியும் தன் விரலைச் சுட்டி காண்பித்ததுபோல் உருவகப் படுத்துகிறது.

பலித்தீவைக் கடந்து ஜாவாவின் சுரபாயா நகரில் வந்து இறங்கினேன். வெளிநாட்டு வணிகர்கள் குழுமும் முக்கிய வியாபாரஸ்தலம் இவ்விடம். ஜாவாவின் முக்கியமான விளைபொருள் கரும்பு. ஆகவே, இச் சிறு தீவிலிருந்து உலகெங்கும் சீனி ஏற்றுமதி ஆகிறது. ஒரு சமயம் உலகிலேயே சர்க்கரை உற்பத்தியில் நம் நாடு முதன்மையாக நின்றது. இன்றோ, ஜாவா சர்க்கரையைக் கொண்டு கல்கத்தாவிலிருக்கும் பிரபல பட்சணக்கடைக் காரர் பீம் சந்திரநாக் ரஸகோலா, ஸந்தேஷ் எல்லாம் தயார் செய்கிறார். பூமி இயல்பாக நமக்கு வாரிவழங்கும் பொருள் ஒன்றையே நம்பி இருந்தால் நாம் ஏமாந்தவர்களாவோம். அது தரும் பொருளைக்கொண்டு இலாபம் அடைவதே கவனிக்கவேண்டிய விஷயம். இதனால்தான் ஒரு நாட்டின் செல்வம் பெருகும். கறவைத் தொழிலில் அநுபவம் உடைய இடையனுக்கு, எந்தவிதமான நிலைவைத்தால், எந்த இனக்காளையுடன் பலப்படுத்தினால் பசுமாடு நிறையப் பால் தருமென்று தெரியும். பசுமையார்ந்த இந்தத் தீவு உலாந்தா மக்கள் வரைக்கும் வற்றாது சுரக்கும் காமதேனு. இந்தப் பால்பசு ஒரு சொட்டுக்கூட வறளாமல் பாலைப் பொழியச் செய்யும் வழி இவர்களுக்குத் தெரியும்.

நம்மை ஆள்வோரும், இந்தியாவை மாட்டுத் தொழுவ
மாக ஆக்கியுள்ளனர். உலகத்திற்கு அவசியமான தேயி
லையும் சணலையுமே உற்பத்தி செய்து தம் வயிற்றை நிரப்
பிக்கொள்கின்றனர். ஆனால் மற்றொரு பக்கம் வேளாண்
மக்கள் உணவுப்பொருள் கிட்டமுடியாமல் நாளுக்கு நாள்
அழிந்துபோகின்றனர். இத்தனை நாட்கள் கழித்தே இந்தி
யாவில் உணவுப்பஞ்சம் என்பதை உணர்ந்தனர் அரசாங்
கத்தார். இதன் மூலகாரணத்தைக் கண்டறிய கமிஷன்
ஒன்றை நிறுவி இருக்கின்றனர்; அறிக்கையும் சீக்கிரத்
தில் வெளியாகும். வறுமையால் முறிந்த மனச் சக்தியை
வெறும் அறிக்கைகள் வெளியிடுவதனால் சரிப்படுத்தி
விடமுடியாது. நீர்வசதி இராமல் நிலங்களில் பயிர்
தீய்ந்துபோனாலும் பெரிய ரஸ்தாக்கள் போடவும், நகரங்
களில் பல அடுக்கு மாடிக் கட்டடங்களை எழுப்பவும் வேலை
கூலியாட்கள் அகப்படுவார்கள்! ஆனால் உலாந்தா அர
சாங்கத்தார் ஜாவாவை இந்தக் கதிக்குக் கொண்டு விட
வில்லை. உழவுத் தொழிலில் அக்கறை செலுத்துகின்ற
னர். நீர்ப்பாசனத்திற்கு எவ்வளவோ வசதி செய்துள்
ளனர். இந்நாட்டு மக்கள் இதனால் வயிறார உண்ணும்
பாக்கியம் பெற்றிருக்கின்றனர். ஆளும் வர்க்கத்தினருக்
கும் இந்த வியாபாரத்தில் நல்ல வருமானம். இதனுள்
அடங்கிய கருத்து என்னவெனின், நாட்டுப் பற்றுதலைக்
காட்ட நாட்டுச் சாமான்களை உபயோகிப்பது நல்லதுதான்;
ஆனால் நிறைய உற்பத்திசெய்து வெளிநாட்டு வியாபாரம்
செய்வது பின்னும் நம் தேச கௌரவத்தை எடுத்துக்
காட்டும் என்பதே. இதை இந்தியர் உணரவில்லை. ஒரு
நாட்டின் பொருளாதாரம் உன்னத நிலைக்கு வரவேண்டின்
அதற்கேற்ற அறிவும் அநுபவமும் பயிற்சியும் அவசியம்.
வெறும் அரசியல் கொள்கைகளைக் கற்பதோடு நிற்காமல்
வெளி நாட்டார் மற்றத் துறைகளில் திறமையாகச்
செய்யும் வழிகளைக் கற்கவேண்டும். இதனால் நம் சுதேசப்

பற்றோ ஜாதி அபிமானமோ குறைந்து போய் விடாது.

சுரபாயாவில் மூன்று நாட்கள் நான் விருந்தினனாக எவர் மாளிகையில் தங்கியிருந்தேனோ அவர் சுரகர்த்தாவின் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் தமக்குள்ள அரச உரிமைகளை விட்டொழித்து இந்நகரில் ஒரு பெரிய வியாபாரியாக விளங்குகிறார். வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்வது அவருடைய தொழில். இதனால் அவருக்குக் கொழுத்த இலாபம் கிடைக்கிறது. ஆள் பழங்குடியைச் சேர்ந்தவர்; யோக்கியர்; மட்டுமரியாதை அறிந்தவர். அவருடைய மகன் இக்காலத்து உயர்தரக் கல்வி பயின்றவன். பெருந்தன்மை, வணக்கம், கண்ணுக்கு இனிய சாயல் எல்லாம் அவனிடத்தில் காணலாம். விருந்தினரை உபசரிக்கும் பொறுப்பு அவனுடையது. எனக்கோ யாரேனும் திடுமென வந்து சொற்பொழிவாற்றுதற்கோ எங்கேயாவது கூட்டத்தில் கலந்துகொள்ளவோ என்னை அழைத்துப் போய்விடுவார்களோவென்று திகில். நிம்மதியாகச் சற்று நாழிகையாவது களைப்பாற வேண்டுமென்பது என் எண்ணம். ஆனால் இதற்குத் தடங்கல் வராமல் அந்த இளைஞரே என்னைக் காத்துக்கொண்டார். இவர்கள் வீடு கடல்போல் விசாலமானது. என் உபயோகத்திற்கு ஒரு தனிப்பக்கமே ஒழித்துவிட்டார்கள். ஏகாந்தமான இடம். உபசரணையில் ஒரு குறைவுமில்லை. எல்லாம் மறைவில் விருந்தபடியே நடக்கும். எனக்குத் தொந்தரை கொடுக்க உள்ளே ஒருவருமே வரவில்லை. நான் உணவு கொள்ளும் பொழுதுதான் புரவலன் என்னோடு சிலகணம் பேச வருவான். 'வீட்டுக்காரன் நானே' என்ற எண்ணம் எனக்கு விழும்படி அவ்வளவு சௌகரியமாக வைத்துக் கொண்டார்கள். என் விருப்பத்திற்குக் குறுக்கே சொல்லவில்லை. நான் எடுத்துக்கொண்ட ஓய்வைக் கலைக்கவும் இல்லை.

இங்கே கலைக்கழகம் ஒன்று இருக்கிறது. நம் கல்கத்தாவிலுள்ள அந்நிய நாட்டு வியாபாரிகளின் சங்கம்போல் முக்கியமாக ஐரோப்பிய இரசிகர்கள் கூடுமிடம். இந்தக் கழகத்தில் கலை சம்பந்தமாக ஏதாவது பேசவேண்டுமென்று என்னைக் கேட்டுக்கொண்டனர். கூடியவரை அவர்களுக்குப் புரியுமாறு பேசினேன். ஒருநாள் என்னை உபசரிப்பவர் வீட்டில் இந்நாட்டுப் பிரபலஸ்தர்கள் ஒன்று குழுமினர். அன்று மாலை இவர்களுடைய கேள்விகளுக்குப் பதில் அளிப்பது என் வேலையாக இருந்தது. சுநீதியும் அவர்களுடைய சபையில் அற்புதமாகப் பிரசங்கம் செய்து அவர்களது நன்மதிப்பையும் பெற்றதாகக் கேள்விப்பட்டேன்.

இங்குள்ள இந்திய மக்கள் ஒரு நாள் மாலை என்னை வரவேற்கப் பெரியதோர் தேநீர் விருந்து நடத்தினர். அதில் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் கலந்துகொண்டனர். அன்று எனக்குத் தட்சிணையாக ஒரு பணமுடிப்பையும் தந்தனர்.

நான் தங்கியிருக்கும் வீட்டுமுற்றத்தில் எத்தனையோ வகையான மரங்கள். மூலைக்குமூலை பச்சென்றிருக்கும் கொடிவீடுகள். மரங்களில் மா, சபோடா இவையே அதிகம். 'மது' என்று இவர்கள் அழைக்கும் மாம்பழ வகையே உயர்வானதாம்; சுவைமிக்கதாம். இந்த முறை மழை குறைவானதால் மரங்களில் அவ்வளவாகக் காய்ப்பில்லை. அருமையான இந்த மாம்பழத்தை ருசி பார்க்க எனக்கு அனுப்பினர். நம் ஊரானால் இத்தகைய பழத்தை அறுத்துத் தின்னவேண்டிய கஷ்டமே இராதுபோயிருக்கும். இந்தக் காசுக்குக் கேடாக வாங்கியும் இருக்கமாட்டோம். ஆனால் இதற்கோ இங்கே என்ன கிராக்கி!

இந்த வீட்டினுள் நிழலடர்ந்த கொடி வீட்டினுள், என்னை உபசரிக்கும் வீட்டுக்காரி பெரும்பாலும் பொழுதைப் போக்குவாள். அவளைச் சுற்றி அந்தப் பரந்த முற்றத்தில் குழந்தைகள் கூச்சல் போட்டு விளையாடும்.

கிழத்தாதிகளும் கூடவே இருப்பார்கள். அந்தப்புரப் பெண்டுகள் ஒவ்வொரு மூலையிலும் 'பாதிக்' என்று வழங்கும் சேலைகளுக்குத் தீட்டும் சாயப் பூ வேலையில் ஈடுபட்டிருப்பார்கள். தண்ணிழல் கனிக்க இவ்விடத்திலிருந்துதான் விட்டுவேலையின் சுழல் நாற்றிசையும் பரவும்.

மறுநாள் சுரபாயாவிலிருந்து நெடுந்தூரம் இரயில்வழியாக வெம்மையான பகலில் மூன்று மணி நேரம் சென்ற பின்னர் சுரகர்த்தாவை அடைந்தேன். ஜாவாவின் பெரிய அரச மரபினர் இங்கேதான் வசிக்கின்றனர். உலாந்தாக்காரர்கள் இவர்களிடமிருந்து அரசுரிமை யாவும் பறித்துக்கொண்டுவிட்டனர். ஆனால் இவர்களுக்குரிய கௌரவத்தை அவர்களால் அபகரித்துக்கொள்ள முடியவில்லை. இந்த அரசவம்சத்தைச் சேர்ந்த ஒருவர் மாளிகையில்தான் தங்கி உள்ளேன். இவருடைய பட்டப்பெயர் மங்குநகரா. இவ்வரச பரம்பரையின் முதல் கிளையார் சுரபாயாவில் அடைக்கலம் புகுந்தவர்கள்.

மாளிகையில் ஒரு தனிமையான பகுதி முழுவதும் எங்கள் அதிகாரத்தின் கீழ்தான் இருக்கிறது. நிம்மதியாக இருப்பதற்கு வேண்டிய இடம்; எத்தனையோ சாதனங்கள். அதிகமான உபசாரணை போன்ற தொந்தரவே இல்லை. அரண்மனை மிகவும் பெரிது; எத்தனையோ வீதிகள். நான் இருக்கும் பகுதியில்தான் பெரிய வராந்தா. வெள்ளைச் சலவைக் கற்கள் பாவிய தரை. பெருத்த செம்மரத் தூண்கள். கூரைவரைக்கும் மரக்கோப்பே. இவர்களுடைய இலச்சினையின் நிறம் மஞ்சளும் சிவப்பும். தூண்கள், தரை எங்கும் பச்சையும் பொன்வர்ணமும் விசித்திரமாகத் தீட்டப்பட்டிருந்தன. வராந்தாவின் ஒரு புடையில் 'காமலான்' வாத்தியங்கள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. இந்த வாத்தியங்கள் விந்தையான நாதத்தை எழுப்புவதோடு எண்ணிக்கையிலும் அதிகமாக இருந்தன; ஏழு சுரங்களை எழுப்புவது, ஆறு சுரங்களில் ஒலிப்பது, ஐந்து சுரங்களைக்

காட்டுவது இப்படி எத்தனையோ சுருதிபேதங்களில் விளங் கின. இந்தத் தாளக வாத்தியத்தை ஒலிக்க எத்தனையோ ஆளில் கொட்டுவர் சுத்திரர். இந்நாட்டு டோலியின் (தவில்) உருவம் நம நாட்டில் உள்ளது போலவே தான் இருக்கிறது. தட்டும் பாணியும் தத்தக்காரமும் ஒரே விதந்தான். இதைத் தவிர வேய்ங்குழல்; வில்லைக்கொண்டு மீட்டும் தந்திவாத்தியங்களும் இருந்தன.

நாசர் இ வீவடிக்கு வந்து என்னை அழைத்துச் சென் றார். மாலையில் சிற்றுண்டி அருந்தும்போது நாங்கள் இருவரும் நன்ருகப் பழகிக்கொண்டோம். அவருக்கு இளவயதுதான். முகத்தில் புத்தியின் பொலிவு குதித் தது. டச்சு மொழியில் நல்ல தேர்ச்சி பெற்றவர். ஆங் கிலமும் சிறிதளவு வரும். விருந்துச் சாப்பாடுகொள்வதன் முன் வராந்தாவில் அணிவகுத்திருக்கும் இசைக்கருவிகள் இயம்பின. அதோடு இந்நாட்டு இசைப் பாட்டைக் கேட்கும் சந்தர்ப்பமும் கிடைத்தது. நம் நாட்டில் வழங்குவன போன்ற பல்லவி, அநுபல்லவி, சரணம் என்ற பாகுபாடுகள் உடையதன்று இது. ஒரே அடி யைத் திருப்பித் திருப்பி பாடினர்கள். விசித்திரம் எதில் என்ருல், வாத்திய வாசிப்பில்தான். இவர்க ளுடைய வாத்தியங்கள் யாவும் தாளத்தையே காட்டுவன. நம் தேசத்தில் தபலா, மிருதங்கம் போன்ற தாளக்கருவி கள் எல்லாம் ஒட்டுமொ சுரத்தில் சுருதி கூட்டியவை. இங்குள்ள தாள வாத்தியங்கள் எல்லாச் சுருதிகளிலும் கூடியவை, விளக்கும்படி சொல்லுகிறேன். 'போகாதே நீ...பொழுதே விடியவில்லை.' பைரவி ராகத்தில் இந்த ஓர் அடியை யாராவது திருப்பித் திருப்பிப் பாடும்போது பல விதமான வாத்தியக் கருவிகள் பல்லவிக்கு ஏற்பப் பல சுருதிகளில் தாளச் சொற்களை இசைத்தால் எவ்வாறு இருக்குமோ அவ்வாறே. இதைப் பரீட்சை செய்து பாருங்கள்; கேட்க இனிமையாகத்தான் இருக்கும். பல





மகாபாரதத்தில் இரண்டு காட்சிகள் (ஜாவா)

நீதிக்குப் புறம்பான ஆபாசம் ஒருபுறம் இருக்கட்டும். நாட்டிய ரீதிககே இது இழுக்கைத் தருகிறது. ஐப்பானி லும் ஜாவாவிலும் நான் கண்ட நடனங்கள் அழகில் எவ்வளவு சிறந்தவையோ, சுவை ஊட்டுவதிலும் அவ்வ ளவு உயர்தரமானவை. இங்கே சிறுமியர் இருவர் உடலைக் கொண்டு உருவற்ற நாட்டியக் கலையை வெளிப்படுத்து கின்றனர். சொல்லைத் துணையாகக் கொண்டது காவியம்; சொல்லுக்கு எட்டாததோர் அழகு இவ்வபூர்வ நடனத் தில் தென்பட்டது.

ஐரோப்பியர்களுக்கு இந் நாட்டியத்தின் நுட்பமான செவ்வி விளங்கவே இல்லை. வெறியாட்டத்தில் விருப்ப முள்ளவர்களுக்குச் சலிப்பைத்தான் தரும் இந்தக் கலை! எந்தவிதமான குற்றமும் இரசபங்கமும் இதில் புலப்பட வில்லை. கண்ணைக் கவரும்வண்ணம் பகட்டாக இந்த நடனம் இல்லை என்றால் அது கண்ணுக்குடையவரின் தவறே. கலை, அழகின் நிறைவான விகாசம் என்பதே என் கொள்கை. மனித சரீரம் வெறும் கருவி. கலை அழகில் அது கரைந்து விடுகிறது.

நாட்டியம் முடிந்ததும் இந்தப் பெண்மணிகள் வாத்தி யக்காரரிடையே போய் அமரும்போது சாதாரணப பெண்களாகவே தோற்றுகின்றனர். உடம்பில் தீட்டிய வர்ணப்பூச்சுத் தெரிகிறது. உடை மிகவும் பிடிப்பாக இருப்பதைப் பார்க்கிறோம்; முகமும் அவயவங்களும் அவலட்சணமாகவே இருக்கின்றன. ஆனால் நிருத்த மிடும்போது இவர்கள் அழகின் சுழற்சியாக மாறிவிடு வதுதான் அபூர்வமாயிருக்கிறது.

மறு நாட் காலையில், அரண்மனையின் மற்றப் பாகங் களைப் பார்வையிடுவதற்கு எங்களை அழைத்தனர். வரிசை யாகத் தூண்களைத் தன் தலைமிசைத் தாங்கும் ஒரு பெரிய மண்டபம். அந்தக் கட்டிடக் கலையைப் பார்த்துத்

திகைத்துப் போனேன். அந்தப்புரம் அளவில் சற்றுச் சிறிது. அந்த மண்டபத்தில் வீட்டுக்காரரும் அவர் மனைவியும் காத்துக்கொண்டிருந்தனர். இராணியைப் பார்க்கையில் நம்தேசத்து அழகி ஒருத்தி போலவே இருந்தது. தடங்கண்; தண் முறுவல்; நாணம், அடக்கம், ஒடுக்கம் எல்லாம் ஒருங்கே அமைந்திருந்தன. மண்டபத்தின் புறமாக மரஞ் செடிகள். பலவிதமான கூடுகளில் பாடும் பறவைகள் அடைபட்டுக் கிடந்தன. மண்டபத்தினுள் இசைக் கருவிகள்; நிழல் ஆட்டத்திற்கு வேண்டிய சாமான்கள்; முகமூடி நடனத்திற்குரிய உபகரணங்கள்; பொம்மலாட்டத்திற்கு அவசியமான பொருள்கள் யாவும் இருந்தன. ஒரு மேஜைமீது 'பாதிக்' வேலை செய்த சேலைகளைப் பிரித்துவைத்திருந்தனர். அவைகளில் இரண்டொன்றைத் தம் நினைவாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று என்னை அரசர் வற்புறுத்தினர். என்னுடன் வந்தவர்களுக்கும் இந்தச் சேலையில் ஒவ்வொரு துணுக்கைக் கையுறையாக வழங்கினார். துணியில் இவ்வாறு சாயம் போடுவதற்கு மூன்றுமாதங்கள் கூடப் பிடிக்குமாம். பெரும்பாலும் அரண்மனைப் பணிப் பெண்கள் இந்த வேலையில் திறமை வாய்ந்தவர்களாம்.

இந்த அரச மரபைச் சேர்ந்த மூத்த குடியில் வந்த ஒருவரது வீட்டிற்கு நேற்றிரவு வரும்படி எனக்கு அழைப்பு வந்தது. அங்கே அரசரீதியில் விருந்து, உபசாரணை. இரண்டு சாரசக் கொக்குகள் ஒன்றையொன்று சுற்றி நடமிடுவதுபோல், இவ்விடத்து உலாந்தா ராஜதூதனும், அரசரும் மாறி மாறிப் பரிவுடன் தம்மை விசாரித்துக் கொள்வதைப் பார்த்தேன். இவர்கள் தத்தம் பதவிக்கு உரிய மரியாதைகளைக் காட்டுவதில் விரசம் எதுவும் இல்லை. ஆனால் இதையே அளவுக்கு மீறிச் செய்தால் 'என்ன வீண் தடபுடல்!' என்று நாம் நகைக்கவேண்டி வருகிறது.

நேற்று நிகழ்ந்த நடனத்தில் ஒன்பது பெண்கள் சேர்ந்து ஆடினர். கலை நுட்பமும் அழகும் அதில் இருந்தன. ஆனால் முன் நடனங்களில் பார்த்த உயிர்த்துடிப்பே சற்றும் இல்லை. நடிகைகளுக்குக் களைப்பினால் ஒருவேளை உணர்ச்சி பூரித்தெழவில்லையோ என்னவோ! வெறும் அப்பியாச வசத்தால் அன்று ஒருவிதமாக நடனமாடினர். அரசர் மகன் ஒருவன் என் பக்கலில் அமர்ந்து என்னோடு பேசிக்கொண்டிருந்தான். அவனை எனக்கு நிரம்பவும் பிடித்திருந்தது. இள வயது; இரண்டு வருஷம் ஹாலந்தில் படித்தவன். அந்தத் தேசத்து ராணுவ இலாகாவில் முக்கியமான பதவி வகித்தவன்; தோற்றத்திலும் நடவடிக்கையிலும் கண்ணியம் மிகுந்திருந்தது. எவரையும் கவரும் சக்தி வெளிப்பட்டது.

நேற்றிரவு இந்த இடத்தில் மற்றொரு நடனக் கச்சேரி நடந்தது. முன் இரவு ஆடிய அதே சிறுமியரே இருந்தனர். அவர்களில் ஒருத்தி முகமூடி அணிந்து நடனம் புரிந்தாள். இதில் விசேஷம் என்னவென்றால் நாட்டியக்கலையின் எழில் கெடாமல், முகபாவத்தாலும், அங்க அசைவாலும், குரலோசையாலும், குழலோசையாலும் விதூஷமான அகசியங்களைக் காட்டினாள். முகமூடிக்கும் அபிநயத்திற்கும் எந்த விதமான முரண்பாடும் தோன்றவில்லை. வேஷம் ஒத்திருந்தது. நாட்டியத்தின் ஒழுங்கைக் கெடுக்காமல் நையாண்டி செய்யும் நகைச்சுவையைக் காட்டியதுதான் எனக்குப் பெருவியப்பைத் தந்தது. நையாண்டி செய்வதிலும் சந்தத்தை மறக்கவில்லை. விரசமாகவே இல்லை. பார்த்து, இன்புற வேண்டிய ஓர் உயர்வான கலையே இந்த முகமூடி நடனம். அரக்க வேடங்களையும் வரம்பிற்கு உட்பட்டே ஆடுகின்றனர்.

[ஸ்ரீமதி பிரதிமா தேவிக்கு எழுதியது.]

## 13

இந்த நாட்டில் வழங்கும் நாட்டிய ரீதிகளைப் பற்றி முடிவாக நான் சொல்ல வேண்டியதைச் சொல்லியாயிற்றென நினைக்கும்போது அன்று இரவே மற்றொரு நாட்டியக் கச்சேரிக்கு அழைப்பு வந்தது. அதே விசாலமான அரங்கு தான். பளிங்குபோன்ற சுவர்கள் மின் விளக்கொளியில் பளபளத்தன. விருந்துண்ண உட்காருவதன் முன் இந்த நாட்டியம் தொடங்கியது. ஆடவர்கள் ஆடும் நடனம். விஷயம்: இந்திரஜித்தனுக்கும் ஹநுமானுக்கும் சண்டை. இவ்விடத்து மன்னரின் தம்பி இந்திரஜித்து வேடத்தில் வந்தார். இவர் நடனக்கலையில் நிபுணர். அதிசயம் என்னவென்றால், முதிர்ந்த வயதிலே இவர் நாட்டியம் பயில முற்பட்டாராம். இளம் பிராயத்தில் உடல் சொன்னபடி வளையும் வயதில் நாட்டியம் பழகுவது எளிது. ஆனால் நாட்டியக் கலையில் ஆர்வமும் மேதையும் இவருக்கு இயல்பாகவே உண்டு. அதனால் இந்தக் கலையைச் சுலபமாகவே கற்று ஆடவும் ஆரம்பித்தார்.

ஹநுமான் ஒரு காட்டு மிருகம்; இந்திரஜித்தனோ கற்றுணர்ந்த அரக்கன். இவ்விருவரின் கூத்தும் வெவ்வேறு பாணியில் அமைவதுதானே சிறப்பு? இன்றேல் சுவை அடியோடு பாழாகிவிடும். முதலில் கண்ணைக் கவர்வது, இவர்கள் பூணும் உடுப்பே. சாதாரணமாக நம் கூத்தில் ஹநுமானுடைய வானரப்பண்பையே அதிகமாகக் காட்டக்கூடிய வேஷத்தைப் போட்டுக்கொள்வார்கள். பார்க்கும் ஜனங்கள் விலாநோகச் சிரிக்கவேண்டுமென்பதே நோக்கம். இந்த ஜாவா ஹநுமான்வேடம் குரங்கின் தன்மையைவிட மனிதத்தன்மையையே அதிகமாக வெளிப்படுத்துகிறது. ஹநுமான் ஆடும் கூத்தில் குதிப்பது, பாய்வதுபோன்ற வானரச் சேட்டைகளைக் காட்டினால் சபையே குலுங்கக் குலுங்க நகைக்குமென்பது

தின்னம். ஆனால் ஹநுமானுடைய மகத்தான தன்மையைக் காட்டி நாட்டியமாடுவதுதான் கடினத்திலும் கடினம். வங்க தேசத்தில் நடக்கும் அபிநயங்களில் வீரம், உயர்ந்த பக்தி, உன்னத தியாகம் இவற்றிற்கு இருப்பிடமான ஹநுமானைவிட, நீண்ட வாலும், குவிந்த முகமும் குரங்குச் சேட்டையும் மிகுந்த மர்க்கடமே காட்சி அளிக்கும். நரனைவிட வானரமே இதில் அதிகமாகத் தென்படும். இன்னும் இந்தியாவில் மேற்குப் பிரதேசங்களிலோ ஹநுமானுக்குத் தரும் மதிப்பு இதனினின்று நேர்மாறானது. தம் குழந்தைகளைப் பெற்றோர், ஹநுமான்பிரசாத் போன்ற இராமதூதனுடைய பெயரை வைத்து அழைக்கின்றனர். ஆனால் வங்காளத்தில் ஹநுமான்சந்திரர் ஹநுமானேந்திரர் என்ற பெயர்கள் இருப்பதாகத் தெரியவில்லை!

இந்நகரத்துள்ளோர் இராமாயணத்தில் வரும ஹநுமானின் சிறந்த குணத்தில் ஈடுபட்டவர். இந்த நாட்டியத்தில் ஹநுமான் வேடத்தைப் பார்த்தேன். பின்புறத்திலிருந்து தலை வரையில் எழும்பி நிற்கும் வால் இல்லாமற் போகவில்லை. ஆனால் அது அமைந்த விதம் வேடத்துக்குப் பொருத்தமாக இருந்தது. அநாவசியமான சிரிப்பை மூட்டவில்லை. வாலைத்தவிர மற்ற அவயவங்கள் மனிதனுக்குள்ளனபோன்றே அமைந்திருந்தன. கிரீடம் தொட்டுக் கழல் அணிந்த கால்வரை இந்திரஜித்தனின் வேடம் ஓர் அழகிய சித்திரமென்றே கூறத் தகும். அப்பால் நடனம் தொடங்கியது. நடனபாணியிலேயே இருவரிடையே சண்டை. டோல், சோமக்கலம், மணி, பல்வேறு இன்னியங்கள், வாத்தியக்காரரின் இடிக்குரல் இவை ஒன்றாக இழைந்து நாட்டியப்போரின் மும்முரத்தையும் பயங்கரத்தையும் எடுத்துக்காட்டின. இந்தப் பின்னணிச் சங்கீதம் காதுக்குப் பிடித்திராது என்கிறீர்களா? அது தான் இல்லை. பல வாத்தியங்கள் இயைந்து ஒலிப்பது நாட்டியத்தில் மிளிரும் வீரச் சுவைக்கு ஒத்திருந்தது.

அபூர்வமான நடனம். எவ்வளவு வீரியம் ததும்பி
யதோ அவ்வளவு அழகும் சொட்டியது. போர்வெறி
கொண்டு இருவர் கைகலப்பதை இந்த அபிநயமிகச் சிறப்
பாக விளக்கியது. சற்றாவது சுவை மாறாட்டம் தென்பட
வில்லை. நம் நாடகமேடையில் இராஜபுத்திர வேடங்
கள் காட்டும் வீரம், வெறும் வாள்விளையாட்டே. இது அவ்
வாறன்று. ஒவ்வொரு முத்திரையிலும் நாட்டியக்கலையின்
காம்பீரியம் தலை தூக்கி நின்றது. மல் யுத்தம்,
கதை யுத்தம் போன்ற விஷயங்களில்கூட அபிநயம்
துளியேனும் கலையின் வரம்பை மீறவில்லை. சொல்லுக்
கடங்காத ஒரு செவ்வியும், ஆண்மைக்குரிய வன்மையும்
இதில் மண்டி இருந்தன. இதற்குமுன் இங்கே பெண்
கள் நடனமாடுவதைப் பார்த்துச் சொக்கிப்போயினேன்.
ஆனால் இந்த ஆடவர் கூத்துக்கெதிரே அது எம்மாத்
திரம்! இதிலுள்ள சுவையே இணையற்றது. 'துருபத்'
என்னும் உயர்ந்த சங்கீதத்தில் மோகம் கொண்டவனுக்கு
'டப்பான்' என்னும் மட்டரகமான இசை இனிமையே
தராது.

இன்று காலையில் பத்து மணிக்கு, என்னை உபசரிக்
கும் பிரபு மற்றொருவகை நடனத்திற்கு ஏற்பாடெல்லாம்
செய்திருந்தார். இது பெண்கள் இருவர் ஆண்வேடத்தில்
ஆடும் கூத்து. அருச்சுனனுக்கும் சுபலனுக்கும்
சண்டை. மகாபாரதத்தில் இந்தக் கதை வருகிறதோ
என்னவோ, எனக்கு ஞாபகம் இல்லை. அருச்சுனனுடைய
படைக்கலங்கள் ஒரு தோட்டத்தில் பத்திரப்படுத்தியிருந்
தன. அவற்றைச் சுபலன் களவாடுகிறான். மேலும்,
அருச்சுனனைக் கொல்ல அவன் சுற்றி அலைகிறான். அருச்சு
னன் தோட்டக்காரன்வேடத்தில் இவற்றையெல்லாம் கவ
னிக்கிறான். வாக்குவாதம் நடக்கிறது. அதிலிருந்து
போர்; சுபலன் பலராமரின் நாஞ்சிலை ஆயுதமாக வைத்
துக்கொண்டிருக்கிறான். யுத்தம் செய்துகொண்டே

அருச்சுனன் அதை அவனிடமிருந்து மெல்லக் கவர்ந்து அதனாலேயே அவனை அடிக்க முற்படுகிறான்.

நடிப்பவர் பெண்கள் என்பது நன்றாகத் தெரிந்துவிடு கிறது. தாம் மெல்லியலார் என்பதை அவர்கள் மறைத் துக் கொள்ளவில்லை. இதற்குக் காரணம் நடனமாடுபவர் ஆணாயிருந்தால் என்ன, பெண்ணாக இருந்தால் என்ன, நடனமாடும் விஷயந்தான் முக்கியமானது. உடல்வரைக் கும் இவர்கள் பெண்கள்; அபிநயத்தில் ஆண்மையும் வீரியமும் பிரதிபலித்தன. ஒன்றுக்கு ஒன்று முரணான இருவேறு தன்மைகள் சேரும்போது நமக்கு இன்னும் [illegible] ஊட்டும். மென்மை மிக்க உடலை ஆதார மாகக்கொண்டு வன்மையான வீரச்சுவை பொங்கு வதை இந்த அரிய அபிநயத்தில்தான் காணமுடியும். இது புலியோடு புலி பொருவது போன்ற காட்சி அன்று; செவ்வந்தி மலரோடு பொன்னூமத்தைக் காம்பும் இதழும் மோதிக்கொண்டால் எவ்வாறு தோன்றும்?- இது அத்தகையதே.

கான அரவத்தை அலைப்பிவரும் சூறாவளியின் ஓலம் போல் 'காமேலான்' வாத்தியங்கள் ஒலிக்கின்றன. மேகம் உறுமுவதுபோல் மிருதங்க நாதம் கேட்கிறது. கிளை யோடு கிளை மோதுகிறது. காற்றின் ஊதல்போல் குழல் இசைக்கிறது. பூவோடு பூ பொருகிறது.

கடைசியில் வந்தார் அரசரின் தம்பி. அவர் ஆடு வது தனி நடனம். கடோற்கச வேடம் தாங்கி இருந்தார். நகைச்சுவையில் விருப்பமுள்ளவர்கள், கடோற்கச வேடத்தைப் பார்த்த மாத்திரத்தில் வயிறு வெடிக்கச் சிரிப்பார்கள். ஆனால் இந்நாட்டு மக்கள் கடோற்கசனிடம் தனியான மதிப்பை வைத்திருக்கின் றனர். மகாபாரதக் கதைகள் இவர்கள் கைபட்டு இன் னும் பன்மடங்காகப் பெருகிவிட்டன. கடோற்கசனுக்கும் பார்க்கவா (பார்க்கவி) னுக்கும் மணமுடிச்சுப் போட்

டிருக்கிறார்கள். அந்தப் பார்க்கிவாவோ அருச்சுனனுடைய பெண். உறவு முறையில் இவர்கள் ஐரோப்பியர்களுக்குக் கிட்டத்தட்ட வருகின்றனர். சிற்றப்பன் மகளைப் பெரியப்பன் மகன் மணந்துகொள்வதில் தவறு இருப்பதாக இவர்கள் எண்ணவில்லை. பார்க்கிவாவுக்குக் கடோற்கசன் மூலம் ஓர் ஆண்மகன் பிறக்கிறான். அவன் பெயர் சசி கிரணன். இது போகட்டும்; இன்று நடந்த நாட்டியத்தின் விஷயமாவது: இனியாளை நினைந்து பிரிவாற்றாமையால் கடோற்கசனுடைய புலம்பல். விரகவேதனை தாங்காமல் அடிக்கடி அவன் தரையில் மூர்ச்சையாகி விழுகிறான். வானிடையே இனியாளின் மதிமுகத்தைக் காண்பது போல் கற்பனைசெய்து கண்ணீர்விடுகிறான். துயரம் தாங்க முடியாமல் காதலியைத் தேடிப் பறந்து செல்கிறான். இதில்நாம் கூர்ந்து கவனிக்க வேண்டியதொன்று உண்டு. ஐரோப்பியச் சித்திரகாரர் தம் 'எஞ்ஜல்' (தேவதூதர்)களுக்குவைப்பதுபோல் கடோற்கசனுக்குப் பொய் இறக்கையை மாட்டவில்லை இவர்கள். தம் உத்தரீயத்தையே இறகுபோல் பறக்கும் பாவனையாக விரிக்கின்றனர். இதைப் பார்த்ததும் சாகுந்தல நாடகத்தில் 'ரதவேகம் நாடயதி' என்று வரும் கவியின் யுக்தி நினைவிற்கு வந்தது. இரதம் செல்வதை நாட்டியத்தின் மூலம் காட்ட வேண்டுமேதவிர அரங்கில் ஒரு தேரைக் கொண்டுவந்து நகர்த்துவது நாடகரீதிக்கு ஒவ்வாது. இராமாயணமகாபாரதக் கதைகள் இவர்கள் உள்ளத்திலும் வாழ்விலும் ஆழமாக ஊறி இருப்பதை நன்கு அறிந்தேன். பூகோளபுத்தகத்தில் படித்துள்ளேன்: வெளிநாட்டிலிருந்து கொண்டுவந்த மரஞ் செடிகளும் மாவும் புள்ளும் தகுந்த சூழ்நிலை இருந்தால் விரைவில் ஒன்றுக்கு ஆயிரமாக விருத்தியடைகின்றனவாம். இதேபோல் நம் நாட்டு இராமகதையும் மகாபாரதமும் வளமிக்க இவர்கள் உள்ளத்துள் பதிந்து இவர்களது சமூகத்தையும் ஓர் அளவிற்கு உருவாக்கி

புள்ளன. மனத்துள் எழும் பெருங் கிளர்ச்சிகளை மறைப்பது எளிதல்ல. கலைப்பண்பு அதை வெளிப்படுத்திவிடும். இந்தப் பண்பை அபரிமிதமாகப் போரோபுதூர்ச் சிற்பங்களில் காணலாம். இவ்விடத்து ஆடவரும் மகளிரும் தம் உடலைத் தூரிகையாகக்கொண்டு மகா காவியங்களில் வரும் கதா பாத்திரங்களை, திருத்தரூபமாகக் காட்டுகின்றனர். நாட்டியச் சங்கத்தின் மூலம் இந்தக் கதைகள் இவர்களது இரத்தத்தில் தோய்ந்து அபூர்வமான பாவங்களை எழுப்புகின்றன.

எந்த விதமான நடனங்களும் அபிநயங்களும் இந்தப் பழங்கதைகளை அடிப்படையாகக் கொண்டே உலவுகின்றன. பாரதத்தோடு இவர்களுக்கு இருந்த தொடர்பு என்றோ அற்றொழிந்தது. இராமாயணமும் மகா பாரதமுமே இரு நாட்டிடையே இருந்த உறவைக் காப்பாற்றின. உலாந்தாக்காரர்கள் இந்தத் தீவுகளை 'டச்சின்டீஸ்' என்று அழைத்தாலும் 'வியாஸ இண்டீஸ்' என்று பெயர் சூட்டியிருந்தால் பொருத்தமாக இருக்கும். முன்பே கூறியுள்ளேன்: இவர்கள் கடோற்கசன் மகனுக்கு சசிகிரணன் என்று பெயர் வைத்திருக்கின்றனர். வடமொழியில் வரும் பெயர்களை வைத்துக்கொள்ளும் ஒரு வழக்கம் இன்றளவும் இவர்களிடையே காணலாம். நம காதுக்கு இவ்விடத்து அரச வைத்தியனுடைய வரிசைப் பெயர் சற்று விசித்திரமாக இருக்கும். 'க்ரீட நிர்மல' என்ற சொற்களை எந்தப் பொருளில் கொள்கிறோமோ அவற்றையே இங்கும் கொள்ளலாம். ஆனால் 'க்ரீட' என்ற சொல்லுக்கு அகராதியில் 'விளையாட்டு' என்ற பொருள் கொடுத்திருக்க, 'க்ரீட' என்றால் இங்கே முயற்சி என்ற பொருளை ஏற்றுள்ளனர். நோயை அகற்றுவதற்கான முயற்சியே இந்த 'க்ரீட' என்பதன் கருத்து. விளைநிலங்களில் மடைநீர் பாய்ச்சுவதை இவர்கள் 'ஸிந்து-அம்ருத' என்கின்றனர். ஸிந்து என்ற சொல் நீரைக்

குறிக்கிறது-பயிர்களைச் சாவாமல் காப்பது நீர்; ஆதலால் அதை 'அம்ருத'என்று சொல்லத் தகும். என்னைபுரக்கும் இந்த மன்னரின் ஒரு மகனுக்குப் பெயர், 'ஸரோஷன்';மற் ெருருவன் பெயர் 'ஸந்தோஷன்'. 'ஸரோஷன்'. என்றால் இங்கே ரோஷமுடையவன் என்ற பொருளில் வரவில்லை; தேசு மிகுந்தவன் என்று பொருள். மன்னரின் மகள் பெயர் 'குஸுமவர்த்தினி.' 'அனந்தகுஸும' 'ஜாதி குஸும', 'குஸுமாயுத', 'குஸுமவ்ரத' எல்லாம் பூவோடு ஒட்டிய பெயர்கள். இங்கே உலவும் இந்த வடமொழிச் சொற்களில் கம்பீரம் ஒலிக்கிறது. அவை சுத்தமான சம்ஸ்கிருத உச்சரிப்புடையன.

## 14

நான் ஒருமன்னரின் மாளிகைக்குச் சென்றிருந்தேன். அவர் பெயர் ஹுசுனன் பாகு-புவன். அவருடைய புதல்வன் ஒருவர் வீட்டிற்கு நேற்று அழைத்துச் சென்றார்கள். அவன் பெயர் அபிமன்யு. இவர்கள் யாவரும் சுபாவத்திலேயே கண்ணியமும் விநயமும் மிக்கவர். இங்கே மகாபாரதத்தின் விராட பருவத்திலிருந்து ஒரு கதையை நிழலாட்டமாகக் காட்டினர். வேறு எந்த நாட்டிலும் இந்த விசித்திரமான நிழலாட்டம் நான் கண்டதில்லை. ஆகவே, அதைச் சற்று விளக்குவேன்: நல்ல வெளுப்பான துணித்திரை. அதன் முன் பிரகாச மான விளக்கொன்று எரியும். அதன் இரு பக்கங்களிலும் மெல்லிய அட்டைபோன்ற தோலில் வரைந்த சித்திர உருவங்கள். அவை மகாபாரதக் கதையில் வரும் பல பாத்திரங்களைக் குறிக்கும். அவற்றின் கையும் காலும் கயிற் றினால் இயக்கப்படும்போது ஆடுவதற்கென அமைந் திருந்தன. நீண்ட மூங்கிற் குச்சிகளில் இந்த உருவங்கள் கட்டப்பட்டிருந்தன. ஒருவன் சுரத்தோடு கதையைப் பாடு

வான்-அந்தக் கதைக்குத் தக்கப்படி அட்டைப் பொம்மைகளை ஆட்டி அவற்றின் நிழல் திரையில் விழும்படி ஆட்டுவான். கதையின் பாவத்திற்குச் சரியாகக் 'காமெலான்' இசைக்கும். மகாபாரதத்தைக் கற்கும் ஒரு வகுப்பில் பாடத்தோடுகூடச் சித்திரங்களைத் துணையாகக் கொண்டு அபிநயமும் காட்டினால் மனத்தில் எவ்வளவு ஊன்றும்! இப்படி நம் பள்ளிக்கூடத்திலே சரித்திரப்பாடங்களைப் படங்கள் மூலம் போதித்தால் நல்ல பலனைத் தரும். உபாத்தியாயர் விஷயத்தை வருணிக்கவேண்டும். மற்றொருவர் பொம்மைகளை ஆட்டி விஷயத்திற்கேற்ற அபிநயங்களைக் காட்டவேண்டும். உணர்ச்சிக்குத் தகுந்தவாறு வாத்தியங்களில் இசையும் தாளமும் இலயமாகும்படி வாசிக்கவேண்டும். சரித்திரம் கற்க இதைவிட நேர்த்தியான முறை வேறு உண்டா?

இவர்களிடையே வழங்கும் புராண இதிகாசக் கதைகள் நாட்டியத்தையே மொழியாகக் கொண்டு நம்முடன் பேசுகின்றன. இந்தக் 'காமெலான் சங்கீதமும்' சுரங்களின் விருத்தியமே! ஒரு சமயம் துரிதமாயும் ஒரு சமயம் விளம்ப காலத்திலும், சில சமயம் உரக்கும், சில சமயம் மெதுவாகவும் ஒலிக்கும். இசைக்கென்றே இசை அமைந்திருக்கவில்லை; ஒரு விசித்திரக் கதையைக் காட்டும் நடன சந்தத்திற்கு உதவி செய்யும் உறுப்பாகவே இருக்கின்றன.

மணிவிளக்கொளிரும் அந்த மண்டபத்தில் அமர்ந்தபோது எனக்கு முதலில் ஒன்றுமே விளங்கவில்லை. சில நாழிகைக்கெல்லாம் என்னைத் திரைக்குப் பின்புறமாக அழைத்துச் சென்றனர். அங்கே வெளிச்சமே இல்லை. அந்த இருட்டில்தான் பெண்கள் உட்கார்ந்து இந்த நிழலாட்டத்தைப் பார்த்துக்கொண்டிருந்தனர். இந்தப் பக்கத்திலிருந்து கவனித்தால் உருவங்கள் புலப்படா. அவற்றை ஆட்டிவைக்கும் ஆளும் நம் கண்ணில் படமாட்டான். வெளிச்சம் படும் வெள்ளைத்திரைமீது உரு

வங்களின் மறு பாகத்து நிழல்கள்தாம் கூத்தாடின. படுத்திருக்கும் சிவபிரான் உடல்மீது மகாகாளியின் நடனம்போலவே இருந்தது இந்தக் காட்சி. ஒளி உலகில் உறையும் சிருஷ்டிகருத்தன் திரைமறைவில் ஒளிந்து கொண்டிருக்கும்போதுதான் படைப்பின்விசித்திரத்தைப் பார்க்க முடிகிறது. சிருஷ்டி செய்பவனுக்கும், சிருஷ்டி ஆகும் பிரபஞ்சத்திற்கும் இடையே ஓர் ஒற்றுமை இருப்பதை உணர்ந்தவனே பரம சத்தியத்தைக் கண்டவனாவான். இந்தக் கண்ணைக்கில்லாதவனுக்கு அண்டசராசரம் வெறும் நிழற்கூத்தாகவே - பொய்மயமாகவே - தோன்றும். இந்த இரகசியத்தைக் காண விழைவோரில் ஓர் இருவர் திரையைக் கிழித்து உள்ளே என்ன நடக்கிறதென்று ஆராய்கின்றனர். அதாவது,சிருஷ்டிப் பொருளை விலக்கிச் சிருஷ்டிசெய்தவனைக் காண ஆவல் கொள்கின்றனர். ஆனால் இதைவிட வேறு மயக்கம் என்ன இருக்கிறது? இந்த நிழலாட்டத்தைக் காணுகையில் இந்தப் பேருண்மையே என் மனத்துள் அடிக்கடி வந்து தாக்கியது.

நான் திரும்பும்பொழுது என்னை அழைத்த அந்த மன்னர் எனக்கு விலைமதிக்க ஒண்ணாத பொருள் ஒன்றைக் கையுறையாக வழங்கினார். 'பாதிக்' வேலை செய்த பெரிய அளவு வஸ்திரம் அது. அரசர்களைத் தவிர இதைப் போன்ற ஆடையை ஜாவானியர்கள் உடுத்தமாட்டார்களாம். என்ன விலை கொடுத்தாலும் கிடைக்காத அரிய பொருள். இங்கே நான் பார்க்கவேண்டியன யாவும் பார்த்தாயின. நாளைக்கு யோக்கியகர்த்தாவுக்குப் புறப்பட வேண்டும். அங்கே அரசர் மாளிகையில் நிகழப்போகும் கூத்தும் இசைவிருந்தும் பழைய சம்பிரதாயத்தை ஒட்டியனவாம். இங்கு நான் பார்த்தவற்றுக்கும் அவற்றிற்கும் எவ்வளவோ வித்தியாசமாம். யோக்கியகர்த்தா ஆனதும் போரோபுதூர்: மோட்டாரில் இரண்டு மணி நேரப் பிரயா

னேன். எல்லாம் பார்த்துவிட்டுக் கடையைக் கட்டிக் கொண்டு ஊருக்குத் திரும்ப ஆறுநாட்கள் ஆகலாம். அப்பால் என் இஷ்டம்போல் ஓய்வு.

[ஸ்ரீமதி பிரதிமா தேவிக்கு எழுதியது.]

## 15

நேற்று நாங்கள் பார்க்கப்போன அந்த நிழலாட்டம் எந்தக் கதையை விளக்கியதோ அதன் பிரதி ஒன்றை என் கையில் கொடுத்தனர். இந்தக் கதையில் ஒரு விசேஷம். இவர்களது மகாபாரதத்தில் ‘திரௌபதி’ என்பவளே காணவில்லை. பேடியான பிருஹந்நளை இந்தக் கதையில் பெண் உருவில் ‘மேன-வர்த்தினி’ என்ற பெயருடன் வருகிறாள். கீசகன் இவள்மீது அடங்கா மயல் கொண்டு, பீமன் கையில் சிக்கி மடிந்து போகிறான். இந்தக் கீசகனே ஜாவா மகாபாரதத்தில் மச்ச மன்னனின் விரோதி. பாண்டவர்கள் இவனைக் கொன்று விராட மன்னனின் நன்றியைப் பெறுகின்றனர்.

மங்குநகரோ என்ற பட்டம் வகிக்கும் மன்னரின் மாளிகை வராந்தாவில் இந்தக் கடிதம் வரைகிறேன். என்னைச் சுற்றிலும் சுவர்களில் இராமாயணச் சித்திரங்கள் பட்டுத் துணியில் தயிற்றப்பட்டு விளங்குகின்றன. இந்த அரசர் ஒரு முஸ்லிம். இருந்தாலும் இந்து சாஸ்திரத்தில் காணும் தேவதைகளின் முழு விவரமும் இந்தக் குடும்பத்தாருக்கு மனப்பாடம்.

பாரத நாட்டின் மலை, புனித நதி யாவும் தங்களுக்குச் சொந்தம் என்று பாவிக்கும் தன்மை வாய்ந்தவர்கள். இவ்வாறு நினைப்பதில் தவறென்ன இருக்கிறது?- அதுவும் இராமாயண, மகாபாரதத்தில் வரும் நரநாரியர், பாவ ரூபமாக இவ்விடத்தில் நெடுங்காலமாக உலவும்போது. நம் நாட்டிலோ இவர்களைப்பற்றிய செய்தி எத்தனை பேருக்குத் தெரிந்திருக்கும்? இங்கே குதூகலமாக விட்

டுக்கு வீடு வேடிக்கையும் விழாவும் நடத்துவதுபோல் நம் தேசத்தில் காண முடியுமா?

பாரத நாட்டைப்பற்றி அறிய இவர்களுக்கு இருக்கும் அவாசொல்லி முடியாது. எனது 'கதா ஓ காஹினி' என்ற நூலிலிருந்து படிக்கச் சொல்லிக் கேட்டார்கள். ஒரு ஜாவானியன் அவ்விர காவியத்தைத் தன் மொழியில் ஆக்கி அங்குள்ளவர்களுக்கு இன்னும் தெளிவுற வியாக்கியானம் செய்தான். சித்திரக்கலை சம்பந்தமாகச் சுந்தி ஒளிச் சித்திரங்களைக் காட்டி அற்புதமான சொற்பொழி வொன்றை நிகழ்த்தினர். அரசர் அதை வெகுவாக மெச்சினர்.

[ஸ்ரீ அமிய சந்திர சக்கரவர்த்திக்கு எழுதியது.]

## 16

சுரகர்த்தாவின் மன்னர் மங்குநகரோவிடம் விடை பெற்று யோக்கியகர்த்தாவின் அரசர் மாளிகையில் விருந்தினராக வந்திறங்கினேன். சுரகர்த்தாவில் ஒரு புதிய பாட்டையும் பாலமும் நிர்மாணம் செய்திருந்தனர். பொது மக்களின் உபயோகத்திற்கு அவற்றைத் திறந்து விடுவதற்கு என்னை நாடினர். என் கையாலேயே இதைச் செய்ய வேண்டுமென்பது அவர்களது விருப்பம். பாலத்தின் வாயிலில் பாட்டைக்குக் குறுக்கே காகித நாடாவை மாட்டியிருந்தனர். கத்தியால் அதை நான் துண்டித்ததுடன் வழி திறந்தமாதிரி. இந்தப் பணியை ஆற்ற எனக்குப் பிடித்திருந்தது: வழியில் எதிர்ப்படும் இடுக்கண்களைவது என் போன்ற கவிகளின் விரதமன்றோ! பாட்டைக்கு என் பெயரையே வைத்தனர்.

யோக்கியகர்த்தாவுக்கு வரும் வழியில்தான் பொராம்பான். அந்த இடத்தில் புராதனமான கோயில்களைக் கிலமான நிலையில் கண்டேன். புவனேசுவரத்தில் உள்ளது போலவே உடைந்த தூண்களையும் முகப்புக்களையும்

இணைத்து உலாந்தா சர்க்கார் இந்தக் கோயில்களை ஒருவாறு இவற்றின் பண்டைவடிவிலேயே நிறுத்தியுள்ளனர். நிரம்பச் சிரமமான வேலைதான். சிறிது சிறிதாக ஜீர்ணோத்தாரணமாகிறது. நிபுணரான ஐரோப்பியச் சிற்பியின் மேற்பார்வையில் இது நடக்கிறது. அவருடன் சம்பாஷித்த போது எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. இக்காரியத்தைச் செவ்வனே முடிக்க நம்முடைய புராணங்களையும் சிற்ப நூல்களையும் துருவித் துருவி ஆராய்ந்திருக்கின்றனர். எத்தனையோ சிற்பத் துணுக்குகள் போன இடம் தெரியவில்லை. அதைப்போல் ஒன்றைச் செதுக்கி இணைக்க மாதிரி அகப்பட்டால்தானே- அந்தக் கலையை ஜாவாவிய மக்கள் மறந்துவிட்டார்கள் என்பதற்கில்லை. அந்த யுகத்துப் பாரத நாட்டினரே இதையெல்லாம் நிர்மாணம் செய்தவர்கள். அந்தச் சிற்பரீதியின் வரலாறு பாரத நாட்டில் தேடினால்தான் அகப்படும். இங்கே பிரதானமாகக் கண்ணில் படுவன சிவாலயங்களே. நடமிடும் பாணியில் சிவனுக்கே எத்தனையோ சிலைகள் இங்கே கணக்கின்றிக்கிடக்கின்றன. மூர்த்தங்களும் இருக்கின்றன. ஆனால் அவற்றை விளக்கும் சிற்ப நூல்களோ ஒன்றுமே அகப்படவில்லை. ஒன்று கவனிக்கத் தக்கது; சிவபிரானை இங்குள்ளவர் குருவாகவும், பரம குருவாகவும் போற்றுகின்றனர். புத்தருடைய குருபீடத்தைச் சிவபெருமானே ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிறாரோ என்னவோ! இந்தச் சிவனார் மாந்தருக்கு முக்தி அடையும் வழியைத்தான் காட்டுகிறார். இங்குள்ள சிவனார் நடன சுந்தரர்; மகா காலர். அதாவது நிலையில்லாமல் சுழலும் நியதியின் வெள்ளமும் ஜனனமரண மென்னும் எழுச்சியும் வீழ்ச்சியும் இவருடைய தாண்டவத்தின் சந்தத்தினால் மூள்வனவே. இவரே பைரவர்; பயங்கரர். இதே ஆனந்தக் கூத்தைக் கால் மாறி ஆடினால் மரணக்கூத்து. நம் தேசத்தில் சிவனை இருவிதமாக நோக்குகிறோம். ஒருபுறம்

ஆனந்தமாயும் நிறைவாகவும் விளங்குகிறார். செயலற்ற தோர் அமைதியில் அவர் ஆழ்ந்திருப்பதை இது உணர்த்தும். மறுபக்கம் இருள் கவிந்த மாயம். லீலையினால் உருமாறி மாறிப் பிரபஞ்சம் சுழல்கிறது. இந்த இடத்தில் மகாதேவர் புரியும் தாண்டவ லீலை காளியின் கூத்தோடு கலந்துவிடுகிறது.



அவலோகிதேசுவரர் (புத்தர்)

ஆனால் ஜாவாவிலோ பாலியிலோ நாமபக்தியுமே இல்லை. கண்ணன் புரியும் பிருந்தாவன விளையாட்டுகளின் சின்னமே காணமுடியாது. பூதனை வதம் போன்ற பகுதிகளே தெளிவுபடுகின்றன. கோபியரின் சுவடே தெரியவில்லை. இருந்தால் அந்தக் காலத்துப் பாரத நாட்டின் சித்திரம் ஒரு வாறு புலனாகிறது. இங்கே வழங்கும் இராமாயண மகா பாரதங்களில் எத்தனையோ உப கதைகள் புகுந்துகொண் டிருக்கின்றன. அவை நம் நாட்டில் எந்தக் காவியத் திலும் காணாதவை. இங்குள்ள வித்துவான்களின் அபிப் பிராயம் இது. ஜாவானியர் பாரத தேசத்துக்குச் சென்ற போதோ அல்லது பாரதமக்கள் ஜாவாவுக்குப் போன போதோ எத்தனையோ கதைகளைக் கேட்டிருக்கின்றனர். அவை யாவும் இங்கே நிலைத்துவிட்டன. இன்றுவரை இந்தியாவில் வித்துவான் எவரும் இராமாயணத்தையோ மகாபாரதத்தையோ ஒப்பிட்டு ஆராயமுற்படவில்லை. பல்வேறு இந்திய மொழிகளில் வழங்கும் கதைகளும் உப கதைகளும் மூலத்திற்கு ஒத்து உள்ளனவா என்று பார்க்கவேண்டும். ஜெர்மன் பண்டிதர் எவரேனும் இந்த அருஞ் செயலைச் செய்வாரென்று நாம் காத்துக்கொண் டிருக்கிறோம். பிறகு அவர் ஆராய்ந்த அரிய விஷயங் களுக்கு ஒரு மறுப்புரை எழுதிவிட்டு அதற்காக 'டாக்டர்' பட்டம் பெறுவதுதான் நாம் காணும் கௌரவம்!

யோக்கியகர்த்தாவில் தலைமையான ஆள் அவ்வூர்ச் சுல்தானே. அவர் மாளிகையில் இரவு நடந்த சதிர் ஒன்றைப் பார்க்கப் போயிருந்தேன். அங்கே வந்திருந்த உலாந்தா தேசத்து அறிஞர், இந்த ஊருக்கு அயோத் தியா என்ற பழைய பெயர் உண்டு என்றார். அதன் திரிபே இப்போது வழங்கும் யோக்கியா என்ற சொல்.

அந்தச் சதிரில் நாலு பெண்மணிகள் நாட்டியம் புரிந் தனர். இது அரசகுலத்துப் பெண்பாலார் ஆடும் கூத்து. அந்த நாலு பேரில் இருவர் சுல்தானின் புதல்விகள்.

நான் பார்த்த எல்லா நாட்டியங்களையும் விட இது ஒன்று தான் என் கண்ணுக்கு அழகாய்த் தோன்றியது. இதை வருணிக்க இயலாது. குற்றம் குறை தென்படாத உருவங்களை மெல்லியலாரிடையே காண்பது அரிது. இந்த அபிநயத்தில் வழங்கிய முத்திரைகள் உயர்ந்த கலைப் பண்பை எடுத்துக் காட்டின. இதன் நுட்பத்தை உணர்ந்தவரே இந்த அபிநயத்தில் ஆனந்தம் கொள்ளக் கூடியவர். நாட்டியக் கலையைக் கற்பிக்க ஒரு பெரிய கல்லூரி வைத்து நடத்துகிறார்கள்.

இராமாயணத்திலிருந்து சில பகுதிகளை அபிநயமாகக் காட்டப் போகிறார்கள். அதன் முழு விவரங்களையும் தொகுத்து அனுப்புகிறேன். அதிலிருந்து இந்தத் தேசத்தில் வழங்கும் இராமகதையின் கருத்து உனக்கு ஒருவாறு புரியும்.

[ஸ்ரீ ரதீந்திரநாத் டாகுருக்கு எழுதியது]

## 17

நேற்றிரவு ஓர் இடத்தில் ஜடாயுவதமென்னும் அபிநயத்தைப் பார்க்கச் சென்றிருந்தேன்.

உலகில் மனிதர் எழுந்து நின்று நடப்பதைத்தான் பார்க்கிறோம். இந்த அபிநயத்தில் எல்லாரும் உட்கார்ந்த படியே உலாவுகின்றனர். அதுவும் சகஜமான அசைவில் அல்ல; எல்லாம் நாட்டிய பாணியிலேயே செய்கின்றனர். உட்கார்ந்தவண்ணம் ஆடினால், அசைந்தால் எப்படி இருக்குமென்று பார்க்க வேண்டுமென்ற குதூகலத்தால் இந்த அபிநயத்தைக் கற்பனை செய்து இவர்கள் உருவாக்கி இருக்கவேண்டும். நகைச்சுவை காட்டுவதாயிருந்தால் இந்த முடவ நிருத்தியத்திற்கு ஓர் அர்த்தம் இருக்கும்; இதுவோ மகா காவியம் ஊறிய நாடாயிற்றே; இது ஏன்? சுபாவமாகத் தோன்றும் விகாரங்களைக்கூட அழகாகக்

காட்ட வேண்டுமென்பதுதான் இவர்களது கலையின் நோக்கம். விசித்திரந்தான் இவர்களது இலட்சியம். இயற்கையை அப்படியே பின்பற்றுவதை வெறுப்பவர் இவர்கள். முதற் காட்சி, அரசவையில் தசரதனும் அவனுடைய அமைச்சர்களும் வீற்றிருக்கின்றனர்; நாடக அரங்கில் எல்லாரும் குண்டு சுருட்டாகக் காலை மடித்துக் கொண்டே உள்ளே நுழைகின்றனர். பார்க்க விநோதமாக இருந்தது. சிரிக்காமல் இருக்கவே முடியாது. எனக்கென்னவோ விகாரமாகவே தோற்றவில்லை. குந்திக் கொண்டே நுழைவோரில் தசரதன் யார், பட்டராணி யாரென்பர் எல்லாம் குடுமந்திரமாகவே இருந்தன. அடுத்த காட்சி: கைகேயியும் அவள் தோழிமாரும் அதே மாதிரி குந்தியபடியே வளைந்து குதித்துப் பிரவேசம் செய்கின்றனர். கௌசல்யை வேடம் பூண்டவன், எழெட்டு வயது இருக்கும் ஒரு பையன். கௌசல்யையின் பிள்ளையான இராமன் வேஷம் போட்ட ஆளுக்கு வயது 25-க்கு மேல் இருக்கும். இதென்ன விரசம், பொருத்தமாக இல்லையே என்ற கேள்வியே எவர் மனத்திலும் எழவில்லை; ஏனென்றால், இவர்கள் காண்பது சித்திரங்கள் ஆடும் கூத்தல்லவா? உயிருள்ள மனிதர் ஆடும் நாடகமே அன்று (உயிருள்ளவர் சித்திரங்களைப் போல் நடித்தாலும்!) இதற்கென்ன அர்த்தம் என்று கேட்டால், அவர்கள், 'எங்களுக்குத் தெரியாது. ஆனால் எங்களுடைய சுவை திருப்தி அடைகிறது,' என்கின்றனர். அதாவது, நமக்குப் புரிகிறதோ இல்லையோ இவர்களுக்கு இதிலுள்ள சுவை திருப்தியை அளிக்கிறது. உலாந்தா நாட்டுப் பண்டிதர் ஒருவர், "பலி மக்கள் வெறும் பழக்கத்தினாலேயே விழாக்களைக் கொண்டாடுவதன் அர்த்தமென்ன அதன் உட்கருத்து அவர்களுக்குப் புரியாதபோதிலும், தங்கள் சுவை திருப்தி ஆவதற்கே நடத்துகின்றனர்" என்று சொன்னார். விள்ளப்போனால் அழகு, நிறைவு?

இவற்றைக் குறிக்கும் கருத்து அவர்கள் மனத்துள் இருக்கிறது. விழாக் காலங்களில் அதுஎதிரொலி தரும் போது அத்தியாத்துமிகமான ஓர் ஆனந்தமே அவர்களுக்கு உண்டாகிறது.

அரங்கத்திற்கு வெளியே முற்றத்தில் கணக்கற்ற பேர் கூடியிருந்தனர். மௌனமாக இந்தக் கூத்தை அநுபவித்தனர். பார்ப்பதிலேயே ஓர் இன்பம். இராமாயணக் கதை இவர்கள் மனத்துள் என்றைக்கும் பதிந்துவிட்ட விஷயம். இந்தக் கதையோடு கூத்தின் சித்திரத்தையும் இணைத்துக் கற்பனை செய்து பார்க்கின்றனர். இன்னுமோர் ஆச்சரியம். இந்தச் சித்திரக் கூத்தில் கதையை விளக்கும் பிரயாசையே சற்றும் இல்லை. இராமனுக்கு இளவரசுப்பட்டம் வரப்போவதைக் குறித்துக் கைகேயிக்குக் கோபம். இதை அபிநயம் பிடிப்போனின் குரலாவது, முகபாவமாவது சிறிதேனும் வெளிப்படுத்தவில்லை.

இந்தக் குறையை ஒரு குறையாகவே இவர்கள் கருதவில்லை. சிறு பிள்ளை செய்யும் வேடிக்கையாகவோ, நாட்டுப்புறத்தில் நடக்கும் அகசியமாகவோ இருப்பின் இதைப் பற்றி நாம் வியப்படைய வேண்டியதில்லை. ஆனால் இங்கே சிறந்த கலைத் திறமையும் அழகும் பூரணப் பொலிவுடன் விளங்குவதைப் பார்க்கலாம். ஒரு சிறிய அங்கநியாசங்கூடப் பொருட்செறிவு உடையது. மிகவும் பாடுபட்டு இந்தக்கலை நுட்பத்தை இவர்கள் கற்றிருக்கிறார்கள். அதை அலட்சியம் செய்யவே முடியாது. உருவமும் அசைவும் சேரும் சந்த உணர்வை இவர்கள் புரிந்துகொண்டிருக்கும் அளவு நாம் புரிந்துகொள்ளவில்லை. இவர்களுடைய 'காமெலான்' இசையிலும் இந்தத் தனிப் பண்பைக் காணலாம். முதலில் இந்த வாத்தியத்தைப் பல கணக்கில் வரிசைப்படுத்தி வைத்திருக்கின்றனர். இதை வாசிப்போரிடம் ஒருவிதக் கட்டுப்பாடும் ஒழுங்கும் தென்படுகின்றன. அரங்கில் பொம்மைகளைப் போல் உயிருள்ள

மனிதர் ஆடுகின்றனர். காற்றலையிலோ தாள ஜதியைப் போலச் சுரஜதியும் நர்த்தனம் புரிகிறது. கீதத்தைவிடச் சந்தத்தில்தான் இவர்கள் விளையாட்டெல்லாம். பக்க வாத்தியங்களின் கோலாகலம் இங்கே இல்லை. பல்வேறு இயங்கள் எழுப்பும் செவிக்கினிய தாள அடைவில் சுர நிருத்தங்களைத்தான் அநுபவிக்க முடியும். அதனால் இவர்களது சங்கீதத்தைச் சுர நிருத்தமென்றும் இவர்களது அபிநயத்தை ரூபகாட்டியமென்றும் கூறுவதே பொருத்தமானது. பாரத தேசத்திலிருந்து நடராஜர் இங்கே ஒரு நாள் விஜயம் செய்தபோது அவரைக் கோயிலில் வைத்து இவர்கள் உளமாரப் பூஜித்தனர். அவர் இவர்களுக்கு அருள் புரிந்ததுதான் இந்த நிருத்தங்களை. நமக்கென்ன விட்டுச் சென்றார்? வெறும் சுடலைப் புழுதியைத்தான்!

[ஸ்ரீமதி நிர்மலகுமாரிக்கு எழுதியது.]

## 18

நாங்கள் ஓர் இரம்மியமான இடத்திற்கு வந்திருக்கிறோம் - மலையுச்சியில், ஐயாயிரம் அடிக்குமேல் உயரமிருக்கும். குளிர்ச்சியான இடம். இமாலயப் பிரதேசம் போன்ற சீதளம் இங்கு இல்லை. டிமல்ட் என்ற ஒருவர் வீட்டில் விருந்தாளியாக இருக்கிறேன். அவருடைய இல்லாள் ஆஸ்திரியாவைச் சேர்ந்தவள். வியன்னா நகரத்துப் பெண். இந்த மலைமீதுதான், அழகான தோட்டம் சூழ்ந்த அவர்களுடைய வீடு. அங்கிருந்து நேர் எதிரே நோக்கினால் நிலமார் குன்றுகளுக்கிடையே பாண்டுங் என்ற நகரம் தென்படும். குன்றின் உள்ளங்கையில் வதியும் அந் நகரம் இருந்த இடத்தில் ஒரு சமயம் பெரிய ஏரி இருந்ததாம். கரையெல்லாம் சரிந்து போய்விடவே தண்ணீர் தேங்காமல் ஓடிவிட்டது. இத்தனைநாள் ஓடி

அலைந்ததற்குக் களைப்பாறத் தன்னந்தனியான இடம் அகப்பட்டதே, எனக்கு. ஜாவாவில் இறங்கியதும் இவ்விடம் நிம்மதியைத் தந்தது. எங்கள் பொருட்டுச் சற்றும் சலிப்பிராமல் உழைத்து வருபவர் ஸாமுயெல் கோபேர்பர்க் செம்பு மலை என்பது அப்பெயரின் பொருள். சுநீதி அந்தப் பெயருக்குச் சரியான பரியாய நாமமாகச் சம்ஸ்கிருதத்தில் 'தாம்ரசூடர்' என்று வைத்தார். எங்கள் கோஷ்டியார் அவரை அழைக்கும்போது இந்தப்பெயரையே உபயோகிக்கின்றனர். இதில் அவருக்கு ஆனந்தமே. 'தாம்ரசூடர்' என்பதை மாற்றி அவருக்குச் 'சொர்ணசூடர்' என்று வைத்தால் தகும். தங்கமான மனிதர். எங்களுக்கு வேண்டிய தேவைகளைக் குறிப்புணர்ந்து அவர் பூர்த்தி செய்த பெருந்தன்மையைப் போற்றவேண்டும். எப்போதும் எங்களுக்கு ஏதாவது சௌகரியம்செய்யவேண்டுமென்பதே அவர் சிந்தை. அவ்வளவு அக்கறை எடுத்துக்கொண்டு துணைபுரிபவர்களை இவ்வுலகில் கண்டதில்லை. சுபாவத்திலேயே தாராளமனம்படைத்தவர். மிகவும்ஒல்லியான உடல் படைத்தவரானாலும் அவருடைய உள்ளம் கடல் போல் விசாலமானது. எத்தனையோ சந்தர்ப்பங்களில் இரவும்பகலும் அவரோடு பழகி அவருடையகுணங்களைக் கவனித்திருக்கிறேன். ஒரு தரமாவது சின்னத்தனமாக நடந்துகொண்டதே இல்லை. தமக்கென வாழாமற் பிறர்க்குரியவராகவே இருப்பார், நோஞ்சலான உடல். அந்த நிலையிலும் தமக்காக எந்தச் சௌகரியமும் செய்துகொள்ள மாட்டார். இதைப்பற்றி எத்தனையோ பேர் அவரைக் கடிந்து கொண்டிருக்கிறார்கள். அவர் வருந்தியதே இல்லை. எவரையும் பழித்துக் கூறியதில்லை. ஆங்கிலம் பேச நன்றாக வராது - புரிந்துகொள்ளக்கூடச் சிற்சில சமயம் திணறுவார். மோட்டாரில் என்னை அழைத்துச் சொல்லும்போது என் பக்கலில் உட்காரவேண்டுமென்று அவருக்கு ஆசை. ஆனால் நன்றாகப் பேசத் தெரி

யாததால் வேறு எவருக்கேனும் அந்த இடத்தை விட்டு விடுவார். அவர் இராமற் போயிருந்தால் இந்த ஜாவா யாத்திரை சுவாரசியம் இழந்துவிட்டிருக்கும். எங்களுக்காக இவ்வளவு பாடுபடுபவர் சற்றுப் பிரிந்தாலும் எனக்கு வெறிச்சென்றாகிவிடும். அவர் நண்ணிய உள்ளம் படைத்தவர் என்பது ஒரு விஷயத்தினால் நன்றாகத் தெரிந்தது. எந்த இடத்தில் போகட்டுமே, உடனே சிறு பிள்ளைகள் அவரைச் சுற்றி அலைகின்றனர். அவர்களுக்குச் சமய வயதினராக ஆகிவிடுகிறார். குழந்தை உள்ளம் படைத்தவர். மற்றொர் அத்தாட்சி ஜாவா மக்களைத் தமராகப் பாவித்துவிடுகிறார். ஐரோப்பியரிடத்தில் காண முடியாத ஓர் அரிய குணம் உள்ளவர். ஜாவானியர்களின் நடனக் கலை, சங்கீதம், சிற்பம் இவற்றைப் பாதுகாக்க வேண்டுமென்பது அல்லும் பகலும் அவர் கோரிக்கை. இந்த மாதிரி விஷயங்களை ஆலோசிப்பதற்கு 'ஜாவா சொஸைடி' என்ற ஸ்தாபனம் ஒன்று நிறுவி இருக்கின்றனர். அதை நடத்தும் பெரும் பொறுப்பு அவரைச் சார்ந்தது. ஆனமத்யோகத்தோடு, பிறர்நலத்தையே கோரும் இத்தகைய எளிய மனிதரிடம் எனக்குள்ள அன்பு எத்தகையதென்பது உனக்கு ஒருவாறு புரியலாம்.

[ஸ்ரீமதி பிரதிமா தேவிக்கு எழுதியது.]

## 19

ஜாவாவில் பார்க்க வேண்டிய காட்சிகளெல்லாம் ஏறக்குறையப் பார்த்துவிட்டேன். யோக்கியாவிலிருந்து நேரே போரோபுதுர்தான். அங்கே ஓர் இரவைக் கழித்தேன்.

முண்டங் என்ற இடத்தில் ஒரு சிறிய கோயில். வெறும் கற்குவியல், இதை இந்த அரசாங்கத்தார் சீர்திருத்தி வருகின்றனர். இந்தக் கோயிலின் அமைப்பே

புதுமையானது. இதனுள் புத்தரின் மூன்று விதமான பெரிய உருவச் சிலைகள் இருக்கின்றன. அவற்றை நிமிர்ந்து நோக்கும்போது திகைத்துப்போனேன். வேதனையொன்று என் மனத்தை அலைத்தது. எத்தனையோ மனிதர்கள் கூடி இந்தச் சிலைகளை இங்கே ஒரு காலத்தில் ஸ்தாபனம் செய்தனர். அன்று என்ன பரபரப்பு, குதூகலம் மூண்டிருக்கவேண்டும்! என்ன ஆர்வம் அவர்கள் இதயத்தில் பொங்கி இருக்கவேண்டும்! இந்தப் பெரிய கல் உருவம் மலைமீது இந்தக் கோயிலில் எழுந்தருள பண்ணும்போது, இதே மர நிழல் அடர்ந்த இடத்தில், சூரிய வெளிச்சம் துலங்கிய வானத்தின்கீழ் மக்கள் திரளாகக் கூடித் தம் முயற்சி வெற்றி அடைந்ததைக் குறிக்க அலைபோல் அல்லவோ ஆர்ப்பரித்திருப்பார்கள்! அந்தக் காலத்தில் விரைவில் செய்தி பரப்பும் வசதி இல்லை. இந்தச் சிறு தீவில் மாந்தர் சிலர் தம் விருப்பத்தின்படி முயன்றதைச் செய்து முடித்தனர். திரைகடலைத் தாண்டி அந்தச் செய்தி பிற நாட்டிற்குச் செல்லவில்லை. ஆனால் கல்கத்தா மைதானத்தில் விக்டோரியா மெமோரியல் என்னும் சலவைக்கல் மாளிகையை எழுப்பும்போது உலகெங்கும் திமிலோகப்பட்டது.

நிச்சயமாக, அவ்வழகிய கோயிலைச் சமைக்க வெகு நாட்கள் பிடித்திருக்க வேண்டும். ஒரு மனித ஆயுளில் அதன் நிர்மாணம் முடிந்திராது. இதை எழுப்ப மக்கள் எடுத்துக்கொண்ட உழைப்பையும் ஊக்கத்தையும் இன்றளவும் இந்தக் கற்களே சொல்லுகின்றன. இதை அமைக்க என்ன யோசனை செய்திருப்பார்கள்! என்ன என்ன ஆலோசனைகள் நடந்திருக்க வேண்டும்! பொய்யும் மெய்யும் கலந்து பல கதைகள் இதைச் சுற்றிக் கவிந்திருப்பதை உன்னுங்கால், அக்காலத்தவர் நடத்திய விசித்திர வாழ்க்கை நம் கண்முன் முளைக்கிறது. கோயில்கட்டிமுடிந்தாயிற்று. நாள் தவறாமல், பருவம் தவறாமல் பூவும் புனலும் தூவித் தூய

தீப நைவேத்திய ஆராதனைகளும் நடந்து வந்தன. காணிக்கை செலுத்தியவர் எத்தனைபேர்! தீர்த்தயாத்திரிகர்கள் காலடிபட்டுத் தேய்ந்த கற்கள் எத்தனையோ!

திடுமென அந்தக் காலம், அந்த உலகம் யாவும் மறதிப் புழுதியில் மறைந்துகொண்டன. அன்று வெறும் உண்மையாக எது நிலவிற்றோ அது தன் பொருளை இழந்தது. அருவி வறண்டதும், வெறும் கூழைக் கற்கள் அதன் சுவட்டைக் குறிப்பது போல், இந்த ஆலயம் இன்று தனிமையில் நிற்கிறது. இந்தக் கற்கள் பேசிய மொழியை இன்று மாந்தர் மறந்துவிட்டனர். இக்காலத்தவரான நாங்களொரு சாதா மோட்டார் வாகனத்தில் ஏறி, பாழடைந்து போனதும் அதன் அழகைக் காண, வெகு தூரத்திலிருந்து ஓடி வந்தோம். ஆனால் இருளை விலக்கி அதைப் பார்த்து இன்புறுவதற்கான ஒளி இல்லையே! மனிதன் இயற்றிய இந்தக் கீர்த்தி மீண்டும் சுடர் விட மனிதனையே எதிர்பார்க்கிறது. இந்தச் சுடர் அணைந்து எத்தனை யுகங்கள் ஆயினவோ!

இதற்கு முன்னால் போரோபுதூர் ஸ்தூபத்தை நான் படத்தில்தான் கண்டிருக்கிறேன். அதன் அமைப்பு அவ்வளவாக எனக்குப் பிடித்ததில்லை. ஒருவேளை நேரில் பார்த்தால் அதிலுள்ள சுவை விளங்குமோ என்று எண்ணியிருந்தேன். நேரில் கண்டபோதும் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. படிப் படியாக எத்தனையோ பாகங்கள். இவற்றை ஒன்றாகச் சேர்த்து முடிக்கும் அந்தச் சிகரம், கீழ்ப்பாகத்தின் சுற்றளவுக்கு ஒத்திருக்கவில்லை. பீடத்தின் அடித்தளம் எவ்வளவு விசாலமாக அமைந்ததால்தான் என்ன! மிகவும் சிறியதாகவே தோன்றுகிறது-சிகரம் பல துண்டுக் கற்களை வைத்தெழுப்பிய ஒரு குன்றின்மீது கிண்ணத்தைக் கவிழ்த்து மூடிய மாதிரியே காட்சி தருகிறது. போரோபுதூரைப் பல அரிய அழகிய செப்புக்களைச் சுமக்கும் கூடை என்றால்

மிகையாகாது. நூற்றுக்கணக்கான புத்தரின் வடிவங்கள்,
அவருடைய ஜாதகக் கதைகளை விளக்கும் சித்திரங்கள்
இவற்றைத் தன்னுள் அழகாக அடக்கிக்கொண்டிருக்
கும் பெரியதோர் பூக்கிண்ணம் இது. உள்ளே இருப்பதை
ஊன்றிக்கவனித்தால் உயர்ந்தவகைச்சிற்பங்கள் நம்மைத்
திகைப்புறச் செய்கின்றன. கல்லில் செதுக்கிய ஜாதகச்
சித்திரங்கள் சிற்பக் கலைக்கே பெருமை தருவன. உயி
ரோடு துடிப்பன போன்ற கணக்கற்ற உருவங்கள். ஓர்
இடமாவது விரசமாகவோ அசூயையை மூட்டக் கூடிய
தாகவோ இல்லை. மற்றக்கோயில்களில் தேவ தேவி மூர்த்
தங்களையும், இராமாயண மகாபாரதத்தின் சில உருவ
மான கதைகளையும் பார்த்தேன். இங்கே உலகையே பார்க்
கிறேன். மனிதர் வாழ்க்கையில் நிகழும் எல்லா விஷயங்
களும் காணலாம் அரசன் முதல் ஆண்டிவரை இடம்பெற்
றிருக்கின்றனர். பௌத்தசமயத்தின் மகிமையால் எளியவர்,
நீசர், உலகம் வெறுக்கும் பாதகன் அனைவருக்கும் இங்கே
இடம் அளித்திருக்கின்றனர் சிற்பிகள். மனிதரோடு மற்றப்
பிராணிகளையும் காணலாம். புத்தன் பல்வேறு பிறப்புக்
களில் பிராணியாக அவதரித்த கதையை அந்தக் கலைவல்
லவர் துளியேனும் மறக்கவில்லை. மனிதனுக்கும் விலங்கிற்
கும் இடையே நிகழும் போராட்டத்தின் பிரவாகத்தி
லிருந்து போதிசத்துவர்கள் தோன்றினர் அல்லவா? எவ்
வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் ஓர் இலட்சியம்
அற்பமான ஒரு பிராணியின் சிலையிலிருந்து வெளிப்
படுகிறது. உயிரினத்துள் நிலவும் இந்த நட்பு ஒவ்வொரு
முடிச்சாகக் களைந்து நிர்வாண நிலைக்குக் கொண்டு விடு
கிறது. ஜீவன் பந்தத்துள் சுழல்வது; அது மேன் மேலும்
தன்னைப் பிணைத்துக்கொள்கிறது. இந்தப் பிணைப்பை
அறுக்கும் வழியைத்தான் புத்தர் காட்டுகிறார். சிறு
வயதில் நான் பார்த்த ஓர் அதிசயத்தைச் சொல்லுகி
றேன்: கயிற்றால் கட்டுண்ட வண்ணான் வீட்டுக் கழுதை

விடம் ஒரு கன்று ஓடி வந்து அதன் உடலை நக்கிக் கொடுத்தது. இது எனக்கு வியப்பாக இருந்தது. புத்தர் எந்தப் பிறவியிலாவது இதைப் போன்ற பசுங்கன்றாக இருந்திருக்க வேண்டும். இதைக் கண்ணால் பார்த்தபிறகு ஜாதகக் கதைகளைப் பொய்யென்று எப்படித் தள்ளி விடுவது? நமக்கு அற்பமாகத் தோன்றுவது ஜாதகத்தில் பெரிய விஷயமாக மாறுகிறது. இவ்வளவு பெரிய கோயிலின் சுவரில் அற்ப ஜீவன்களின் வாழ்க்கையை என்ன புனிதமான பக்தியுடன் பொறித்திருக்கின்றனர்!

ராமதேவத்தர பண்டிதர் எல்லாச் சித்திரங்களையும் விளக்க என்னுடன் வந்திருக்கின்றனர். வேற்று நாட்டவரான அவர்கள் என்ன விஷயங்களெல்லாம் திரட்டி வைத்திருந்தனர்! அவர்களுடைய ஊக்கத்தை மெச்ச வேண்டும். ஊமையான கற்சித்திரங்களிலிருந்து அவர்கள் இவ்வளவு விஷயங்களை எவ்வாறுதான் கிரகித்தார்களோ! அவர்களிடத்தில், கல்விச் செருக்குத் துளியேனும் இல்லை. பாரத நாட்டின் சரித்திரத்தை நன்கு தெரிந்து கொள்ளவேண்டுமானால் அத்தகையோரை நாம் குருமாராகப் பெறச் செய்து வைக்கவேண்டும். அவர்களுக்கும் இந்தியாவின் கலை, வித்தை, சரித்திரம் யாவும் வெறும் ஏட்டு விஷயங்களல்ல; வாழ்வு முழுவதும் அவர்கள் பெற்றெடுத்த தவப்பயன்.

## 20

ஜாவா கட்டம் முடிந்தது. படாவியாவுக்கு வந்து சேர்ந்தேன். துறைக்குப் போய்க் கப்பல் ஏறவேண்டியது தான்: அக்கரையிலுள்ள என் சொந்த நாட்டை அடைவேன். மனப்பறவை சிறகை விரித்துவிட்டது. அந்தச் சமயம் பாங்காக்கிலிருந்து தந்தி வந்து குதித்தது. அந்த நாட்டிற்கு என்னை அழைக்கிறார்கள். அரசனுக்குரிய உபசாரத்துடன் என்னை வரவேற்கச் சித்தமாயிருக்கின்றனராம்

சியாமியர். நாளெல்லாம் ஓடிஓடி அலுத்துப்போனகுதிரை லாயத்தை நோக்கி ஆவலோடு திரும்பும்போது, மறுபடி அதை வண்டியில் பூட்டிச் சவாரிக்கு ஓட்டினல் அதன் உள்ளம் என்ன துன்புறும்? அதே போல் என் நிலையும் ஆயிற்று. எனக்குச் சலித்துவிட்டதே! போதுமே நான் பார்த்தவை. நானே தேகத்தை ஒரு ஸிம்மதியான இடத்தில்வைத்துவிட்டு,கற்பனை ஆகாயத்தில் எதேச்சையாகப் பறந்து ஏழு கடலையும் தாண்டி அதிசய நாடுகளில் சஞ்சரித்துவிட்டு வருபவன். இந்த உடற்சுமையை வைத்துக்கொண்டு திரும்பவும் பயணம் சியாமை நோக்கிச் செல்லுகிறேன்; என் சொந்த வீட்டுக்கல்ல.

சிங்கப்பூருக்குப் பயணமாகும் கப்பல் பெரிது. அதில் ஏராளமான கும்பல். நானும் சுரேந்திரனும் சிறிய கப்பலில் இடம் தேடிக்கொண்டோம். வெள்ளிக் கிழமையன்று போய்ச் சேர்வோம். சுநீதி எங்களுக்குப் பின்னல் இரண்டு நாட்கள் பொறுத்துக் கிளம்புவார். ஜாவா மக்கள் அவரை விடவில்லை. அங்கே பெயரும் புகழும் எடுத்துவிட்டார். அவருடைய பாண்டித்தியம் அரைகுறையான தன்று; பூரணமாக உணர்ந்த பிறகே அவர் எதையும் பேசுபவர்.

எங்களுடைய கலம் இரு தீவுகளை வளைத்துக் கொண்டுசெல்லும். அதனல் இரண்டுநாள் வழியைக்கடக்க மூன்று நாட்களாகும். இந்த இடத்தில்தான் உலகுபடைத்தோன் தன்னுடைய பையிலிருந்து எத்தனையோகுட்டித் தீவுகளைச் சமுத்திரத்தில் இறைத்து விட்டிருக்கிறன். இவை யாவும் உலாந்தா அரசாங்கத்தின் வசத்தில் இருக்கின்றன. எங்கள் கப்பல் சில நாழிகை நங்கூரம் பாய்ச்சிய இடத்திற்குப் பிலிடன் என்று பெயர். மனிதர்கள் அதிகமாக இல்லை. வெள்ளியக் கனி அங்கே இருந்தது. அதன் நிருவாகியும்,அங்கேவேலைசெய்யும்பாட்டாளிகளுமே அங்கு வாழும் மக்கள்.ஆகா, உலகை எங்கெல்லாம் பிறிப் புதையலைக் கிளப்புகிருர்கள் இவர்கள்! இவர்கள் பிறந்த ஊர்

எங்கேயோ? கூட்டங் கூட்டமாக எந்தக் காலத்திலோ பாய்மரக் கலங்களில் ஏறி,பயங்கரமானகடலைத் துச்சமாகக் கருதி, முன் பின் அறியாத இடங்களில் வந்து ஒதுங்கி விட்டனர். இவர்கள் சுற்றாத இடம் உலகில் இல்லை. எந்த இடத்தில் எந்தப் பொருள் கிடைக்கும் என்ற விஷயம் இவர்கள் விரற்கணுவில் உள்ளது. தம் ஊக்கத்தை நம்பி இவர்கள் துணிந்து கப்பலேறி வந்தடைந்த இடங்களைக் கண்டு மருண்டு போகவில்லை. தம் வேலையில் உற்சாகமா கவே இறங்கினர். இவர்களுக்கு அன்று எல்லாம் புதியன வாக இருந்தன. ஆனால் இன்றோ இவர்களுக்குத்தெரியாத இடமே இல்லை. எல்லாம் இவர்கள் கையின் கீழ் அடக்கந்தான்.

இந்தத் தடவை யாத்திரையில் என் சொந்த நாட்டி லிருந்து கடிதமோ செய்தியோ உரிய காலத்தில் எனக்கு எட்டுவதில்லை. இதனால் நான் வேறு புதிய பிறவியில் பிரிந்து இருப்பதுபோல் ஒரு வேதனை என் மனத்தை அலைக்கிறது. ஒரு கணம் ஒரு யுகமாக நீண்டதென்பார் களே, அது இப்படித்தான் போலும்! நான் இடம் பெயர்ந்து போய்க்கொண்டே இருப்பதனால், நீங்களும் அங்கே என்ன செய்கிறீர்கள், எவ்வளவு தூரம் ஆசிரம விஷயங்களில்முன்னேறி இருக்கிறீர்கள் என்றெல் லாம் அறியத் துடிக்கிறது மனம். இரயில் வண்டிப் பிரயா ணிக்கு வெளியுலகத்துக் காட்சி காலச்சுழலில் சிக்கி வேகமாக ஓடுவது போன்ற பிரமையைத்தருகிறது. துரித மாகச் செல்லும் இந்தக் கால தூதன்மீது ஏறிப் போகும் எனக்கு நீங்களும் இவ்வளவு விரைவாகச் சென்றுகொண் டிருப்பீர்களென்ற எண்ணமே விழுகிறது. நாம் பிரிந்து இன்று, நாளை, மறுநாள் இப்படியே மாதங்கள் அளவு நீண்டுவிட்டன. முகைக்கும் மலருக்கும் இடையிலிருக்கும் வயதுக்காலம் குறைந்துகொண்டே வருகிறது.தொலைவில் செல்லுகையில் போராபுதூர், பலி இவற்றின் நினைவு

வரும்போது, என்னுடைய பாவனைகளைக் காலத்தின் பரவியமடியிலேயே விளையாட விட்டுவிடுகிறேன். இல்லாமற்போனல் அத்தனை விசித்திரங்களும் கொள்வதற்கு இடம் எங்கே இருக்கிறது! இந்தச் சில தினங்களுள் நான் விரைவாகத் திரட்டிக்கொண்ட விஷயங்கள், என்னுடைய சொப்பனத்தில் சிதறுண்டு கிடக்கையில் அதிகமாகத் தோன்றின. நேரிற் கண்ட பிறகு சுருங்கிவிட்டன. தொலைவில் இருக்கும்போது காலத்தின் பிரமாணம் தெளிவற்றுப் பெரிதாகவே தெரிகிறது. நெருங்க நெருங்க அதே காலம் இறுகித் தெற்றென விளங்குகிறது. கணக்குப் போட்டுப் பார்த்தால் என் இந்தச் சிறு ஆயுட்காலத்தில் எத்தனையோ காலங்கள் ஒன்றன்மேல் ஒன்ருக அடங்கி இருக்கின்றன. நான் சொல்ல விழைவது இதுவே. நான் யாத்திரை செய்த கால அளவில் கண்டது அதிகம், கொண்டது குறைவே. என் பிரயாணத்தின் தாளவிசை துரிதகதி. இந்தத் துரித இலயம் என்வாழ்வில் பழக்கமான இலயம். அன்று வெளிவேகத்துடன் இணைத்து உள்ளத்தையும் உசாவிஓட்டும்போது சங்கடம்வருகிறது. நன்ருகமென்று தின்னுது போனல் உண்டதுபோலவே தோன்றவில்லை. திடுமென்று கடமைகளை முடித்துக்கொண்டு மூட்டை கட்டிக்கொண்டு கிளம்புவது, எதையும் கண்டு களித்த மாதிரியாகாது. கிண்ணத்தில் வழியும் நுரை அளவிற்கு நாக்கு நீள்கிறது. பின்னே இருக்கும் இனிய பானத்தை அருந்துவதற்குச் சமயம் வாய்ப்பதில்லை. சூறைக் காற்று அடித்துச்செல்லும் தேனீ தற்செயலாகப் பூவின்மீது காலை வைக்கிறது. அதில் அது ஊன்றுவதற்குள் கால் வழுக்கினுல் அது எவ்வளவு அலைந்தும் பயன் என்ன? என் மனமும் வீணுகவே காலச்சுழலில் சிக்கி அலைந்துவிட்டு ரீங்காரம் செய்து மாண்டொழிந்தது. போகும் வேகத்தில் போய் அடையும் வாய்ப்பை இழந்து நிற்கிறது. இதிலிருந்து ஒன்று தெளிவாகத் தெரியலாம்: நான் எந்தப்

பிறவியிலும் அமெரிக்கனுகப் பிறக்கவே இல்லை. அடை பெறுவதெதன்பதை உணராதவனே, மேலோடு தொடு வதைத் தன் முழு அநுபவம் எனக் கொள்வான். நம் முடைய மனம் (கண்டதையும் உடனே கவரும்) 'ஸ்நாப் ஷாட்' வகையைச் சேர்ந்ததன்று. வண்ண ஓவியத்தில் திளைப்பது அது.

இதோ சுநீதி துரிதப்படுத்த வந்துவிட்டார்; கவி கோலரிட்ஜ், "நீர்...நீர்... கடலெங்கும் நீர். ஆனல் அருந் தத் துளி நீர் ஏது?" என்று பாடினர். காலக்கடலில் மிதக்கிறேன். ஆனல் ஓய்வெடுக்கச் சற்றேனும் சமயம் இல்லை.

[ஸ்ரீ அமிய சந்திர சக்கரவர்த்திக்கு எழுதியது.]

